# இக்காலத் தமிழ் வேற்றுமைகள்

டாக்டர் முத்துச்சண்முகன்

ஆனந்தா பதிப்பகம்
7/457 காந்திஜி தெரு
சர்வோதயநகர்
மதுரை 625 019

இக்காலத் தமிழ் — வேற்றுமைகள்

ஆனந்தா பதிப்பகம் : 2

வெளியிடுவோர் : N. முத்தம்மாள்

உரிமை ஆசிரியர்க்கு

விலை : ரூபாய் ஐந்து

Title : Modern Tamil—Cases

Author : Dr. M. Shanmugam Pillai

Date of Publication : 1988

Contents : Discussion of the casal system in Modern Tamil

Number of Copies : 1000

Number of Pages : 4+66=70

Size : Demmy 1/8

Letter used : 10 pt.

Copy right : Author

Printed at : Kumaran Pathippagam<br>Madurai-625 019.

Publisher : Ananda Padippakam<br>7/457 Gandhiji Street<br>Sarvodaya Nagar, Madurai-625 019

## துணைநூற் பட்டியல்


1. Arden, A. M. 1976. **A Progressive Grammar of Tamil Language**. The Christian Literature Society, Madras.
2. Jotimuttu. 1970. **A Guide to Tamil**. The Christian Literature Society, Madras.
3. Pope, G. U. 1979. **A Handbook of Tamil Language**. Asian Education Service. New Delhi.
4. Schiffman, Harold. 1979. **A Grammar of Spoken Tamil**. The Christian Literature Society, Madras.
5. Shanmugam Pillai, M. 1975. **A Tamil Reader for Beginners — Part I**, Madurai.
6. Shanmugam Pillai, M. 1971. **Spoken Tamil-Part I** Madurai.
7. Shanmugam S.V. 1971. **Dravidian Nouns**. Annamalai University, Annamalai Nagar.
8. பவணந்தி முனிவர். **நன்னூல்**. பல்வேறு உரைகள்.
9. பரமசிவம், கு. 1983. **இக்காலத் தமிழ் மரபு**. அன்னம்(பி) லிட். சிவகங்கை.
10. முத்துச் சண்முகன் (M. Shanmugam Pillai). 1980. **இக்காலத்தமிழ்**, முத்துப் பதிப்பகம், மதுரை.

# உள்ளே

# இக்காலத் தமிழ்

## வேற்றுமைகள்

பெயர்ச் சொற்களில் சில, வேற்றுமை உருபேற்கும்பொழுது சில மாற்றங்களை அடைகின்றன. மாற்றமடைந்த இவ்வடிவினை வேற்றுமை உருபேற்கும் வடிவம் (Oblique forms) என்போம். இவ்வடிவங்கள் வேற்றுமை உருபு ஏற்பதோடு மட்டுமன்றி, பிற இடங்களிலும் வரும். தோட்டம் என்பதன் அத்துச் சாரியை பெற்று வந்த தோட்டத்து என்னும் வடிவம், வேற்றுமை உருபேற்றுத் தோட்டத்தை, தோட்டத்தால் என்று வருவதைக் காண்க. ஆனால் தோட்டத்துக் கதவு, தோட்டத்துப் பூ என்னும் பொழுது, அவ்வடிவு, கதவு, பூ என்பதற்கு அடையாக வருகிறது. இவ்வாறே வீடு, ஆறு என்பனவும் — வீட்டு வேலை, ஆற்றுத் தண்ணீர் என்ற தொடர்களைக் காண்க. சில பெயர்கள் மாறுபாடின்றியும், மாற்று வடிவுடனும் வேற்றுமை உருபேற்கும். அது என்பது அதை-அதனை; அதுக்கு—அதற்கு என்று, அது—அதன் என இரண்டு வடிவங்களும் வேற்றுமை உருபேற்று வரக் காண்கிறோம்.

இனி வேற்றுமை உருபேற்கும் வடிவங்களை வகைப்படுத்திக் காண்போம்.

1. மூவிடப் பெயர்கள் கீழ்க்கண்ட வேற்றுமை உருபேற்கும் வடிவங்களில் வருகின்றன.

| இடப்பெயர் | அக்கு, உக்கு, அது இவற்றின் முன்னர் | பிறவேற்றுமை உருபுகளின் முன்னர் |
|---|---|---|
| நான் | என் | என்ன் |
| நாம் | எம்/நம் | எம்ம்/நம்ம் |
| நாங்கள் | எங்கள் | எங்கள் |
| நீ | உன் | உன்ன் |
| நீர் | உம் | உம்ம் |
| நீங்கள் | உங்கள் | உங்கள் |
| தான் | தன் | தன்ன் |
| தாம் | தம் | தம்ம் |
| தாங்கள் | தங்கள் | தங்கள் |
| அவை | அவற்ற் | அவற்ற் |

2. அது, இது, எது என்னும் சுட்டுப் பெயர்களும், வினாப்பெயர்களும் ஆல், உடைய, இடம் என்னும் உருபுகளின் முன்பு சாரியை பெற்றும், ஐ, கு, இல் ஆகிய உருபுகளின் முன் அன் சாரியை பெற்றும் பெறாமலும் வரும். நிலைமொழி ஈற்று உகரம் கெடும்.

அது + ஆல் → அது + அன் + ஆல் → அதனால்
இது + உடைய → இது + அன் + உடைய → இதனுடைய
எது + இடம் → எது + அன் + இடம் → எதனிடம்
அது + ஐ → அதை
அது + அன் + ஐ → அதனை
இது + இல் → இதில்
இது + அன் + இல் → இதனில்
எது + கு → எதுக்கு
எது + அன் + கு → எதற்கு

3. அம் ஈற்றுப் பெயர்கள், அம் உருபு கெட்டு அதற்குப் பதில் அத்துச் சாரியை பெற்று வரும். உலகம் போன்ற பிறமொழிச் சொற்கள் சாரியை பெற்றும் பெறாமலும் வரும்.

படம் → படம்+அத்து → படத்தை, படத்திற்கு படத்தால் முதலியன

உலகம் → உலகத்தை, உலகத்தால், உலகை, உலகால் முதலியன

4. தனிக்குறிலை அடுத்துவராது, பிற இடங்களில் இறுதியில் வரும் டு, று இவற்றின் வல்லினம் இரட்டிக்கும்.

ஆறு → ஆற்றை, ஆற்றால் முதலியன
வீடு → வீட்டை, வீட்டால் முதலியன
கிணறு → கிணற்றை, கிணற்றால் முதலியன

5. மூவிடப்பெயர்கள் ஒழிந்த பிற பெயர்கள், வேற்றுமை உருபேற்கும்பொழுது மேலே 3, 4 விதிகளால் பெற்ற வடிவின்பின் இன் சாரியை பெற்றும் பெறாமலும் வரும். 3, 4 விதிகளுக்குப் புறம்பான பிறபெயர்கள், கு வேற்றுமை உருபு தவிர மற்ற வேற்றுமை உருபுகளின் முன், இன் சாரியை பெற்றும் பெறாமலும் வரும்.

(கு வேற்றுமைக்குரிய மாற்றங்களை அவ்வேற்றுமையில் காண்க).

படம் → படத்தை —படத்தினை ; படத்துக்கு — படத்திற்கு
வீடு → வீட்டை - வீட்டினை ; வீட்டுக்கு —வீட்டிற்கு
காய் → காயை —காயினை ; காய்க்கு —காயினுக்கு
குழு (குழுவு) → குழுவை —குழுவினை ; குழுவுக்கு — குழுவிற்கு
வயல் → வயலை —வயலினை ; வயலுக்கு —வயலிற்கு
பல்லி → பல்லியை பல்லியினை ; பல்லிக்கு

பெயர்கள் ஒருமையாயின், அப்பெயர்களின் வேற்றுமை உரு பேற்கும் வடிவங்களின் பின்னும், பன்மையாயின், பன்மை உருபு-களின் பின்பும் வேற்றுமை உருபுகள் வரும்.

வினைகள் அவற்றின் இயல்புக்கேற்ப பல்வேறு வகையில் பெயர்களோடு தொடர்பு கொள்கின்றன. எடுத்துக்காட்டாக, வாக்-கியங்களில் ஒவ்வொரு வினை முற்றும் ஒரு எழுவாயோடு தொடர்-புடையதாக இருக்கின்றது. செயப்படுபொருள் ஏற்கும் வினையயின்

எழுவாயோடு கொள்ளும் தொடர்பின்மேலும், நேரடிச் செயப்படு-பொருளையும் அது விளக்கி வரும். செயப்படுபொருள் ஏலா வினை, மறைமுகச் செயப்படுபொருளை ஏற்று வரலாம். நிலையைக் குறிப்-பிடும் வினைகள் பல, காலம், இடம் இவற்றின் நிலையைச் சுட்டும் பெயர்களைத் தழுவி வருகின்றன. எனவே, வேற்றுமை, புறவடி-வில், பெயர்த் தொடருக்கும் வினைத் தொடருக்கும் இடையே உள்ள தொடர்பினை விளக்கி வரும் எனலாம். எழுவாய், செயப்-படுபொருள் என்னும்பொழுது இலக்கணத் தொடர்புடையதாகவும், இடம், கொடை என்னும்பொழுது பொருள் தொடர்புடையதாயும் வரக் காண்கிறோம். இத்தொடர்புகளை வேற்றுமை உருபுகளே-யன்றிச் சொல்லுருபுகளும் விளக்கிவரும்.

தமிழில், பொருள் தொடர்பே மிகுதியாகச் செயல்படுகிறது என்று கூறவேண்டும். எழுவாய் வேற்றுமைப் பெயர் எத்தகைய உருபும் இல்லாது வருவது என்பர். ஆனால், வாச்கியங்களில் உருபு எதுவும் இல்லாது வரும் பெயர்கள் எல்லாம் எழுவாயாக வருகின்றன என்று கூறமுடியாது. ஐ வேற்றுமைப் பொருளில் வரும் பெயர்கள் பல இடங்களில் உருபு எதுவும் இல்லாமல் வரும். அதனால் அது எழுவாயாக முடியாது. எழுவாய்ப்பெயர் தன்னிச்சை இல்லாது நிக-ழும் அனுபவத்தைப் பெறும்பொழுது (எனக்குத் தலை வலிக்கிறது) கு உருபேற்று வருகிறது. உறுதிப் பொருளைச் சுட்டுவதற்கோ, ஒரு பொருளைத் தனியாகப் பிரித்துச் சிறப்பித்தற்கோ, ஐ வேற்றுமை உருபைப் பயன்படுத்துகின்றோம். வேற்றுமை, பொருள் தொடர்பைச் சுட்டி வருவதையே இதுவும் விளக்குகிறது. அன்றியும், வேற்றுமை, பெயருக்கு வினையோடு உள்ள தொடர்பை மட்டும் விளக்குவதாயும் இல்லை. வினையல்லாத பிறவற்றோடு உள்ள தொடர்பையும் அது விளக்கி வருகிறது.

தொடக்க காலத்தில், இலக்கண ஆசிரியர்கள் வேற்றுமை-களை அவற்றின் உருபுகளாலேயே சுட்டி வந்தனர். ஐ வேற்றுமை-ஐயெனப் பெயரிய வேற்றுமை, கு வேற்றுமை—கு எனப்பெயரிய வேற்மை என்று இவ்வாறு கூறி வந்தனர். பிற்காலத்தில் முதல் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை என்று எண்களால் சுட்டி

வந்தனர். வெளிநாட்டவர் தமிழிக்கு இலக்கணம் எழுதத் தொடங்கிய பொழுது Accusative Case, Dative Case என்று இலத்தின் இலக்கண மரபிற்கேற்ப பெயர் கொடுத்து விளக்கினர். கு. பரமசிவம், எழுவாய் வேற்றுமை, நீக்கல் தேற்றுமை, கிழமை வேற்றுமை, இட வேற்றுமை, விளி வேற்மை, எனப்பெயர் கொடுத்து விளக்குகின்றார். இப்பெயர்கள் பொருந்தாமையை அவரே பல இடங்களில் விளக்கிச் செல்கின்றார். அன்றியும் இவற்றில் சில பெயர்கள் தொடரியல் செயற்பாட்டின் அடிப்படையிலும் (எழுவாய் வேற்றுமை, செயப்படுபொருள் வேற்றுமை போல்வன) சில பெயர்கள் அவை வரும் பொருளின் அடிப்படையிலும் (உடனிகழ்ச்சி, கொடை வேற்றுமை போல்வன) அமைந்திருக்கின்றன. பெயர் கொடுப்பதன் அடிப்படையில் ஒருமைப்பாடு இல்லை. பொருளின் அடிப்படையில கொடுக்கப்படும். பெயர், அது விளக்கும் பல பொருள்களில் ஒன்றையே சுட்டுகிறது. (கருவி வேற்றுமை, கொடை வேற்றுமை இவைகளைக் காண்க) தமிழில் வேற்றுமைக்குப் பெயர் கொடுப்பதில் எழும் சிக்கல்கள் பல. இவற்றைத் தவிர்க்கவே நமது முன்னோர்கள் உருபுகளாலும், எண்களாலும் பெயர் கொடுத்தனர் போலும்.

மேற்கூறிய எதுவும் பொருந்துமாறு இல்லை. வேற்றுமை எட்டு என்ற தொகையும் பொருந்தாது. இப்பொருந்தாமையைக் கால்டுவெல் தொடங்கிப் பலரும் விளக்கி உள்ளார். எனவே தமிழில் மொத்த வேற்றுமைகள், அவற்றின் பொருள், பயன் இவைகள் இன்னும் தெளிவாக, விரிவாக வரையறுக்கப்படவில்லை என்றே கூறவேண்டும். மேலும் மேலும் நிகழும் ஆய்வுகளாலேயே இதில் தெளிவு கிடைக்கவேண்டும். அத்தகைய முயற்சிகளில் மொழியியலார் பலர் ஈடுபட்டிருப்பது நல்ல அறிகுறி. அவர்களாலேயே இனித் தெளிவு கிடைக்கவேண்டும்.

நாம் இங்கு வேற்றுமைகளை உருபுகளாலேயே குறிப்பிடுவோம். ஒவ்வொரு வேற்றுமைக்கும் பல பொருள்கள் இருப்பினும் உருபால் ஒன்றாக இருக்கின்ற இயல்பால், இவ்வாறு பெயர் கொடுத்து விளக்குவது எளிதாகின்றது. மொழியியல் கோட்பாட்டிற்கு இது எவ்வளவு பொருந்தும் என்பது ஒரு கேள்விதான். எனினும் குறிப்பிட ஒரு பெயர் வேண்டுமே. பழைய முறையாகவும் இருக்கிறது. அவர்களுக்கும் இந்தச் சிக்கல்கள் எழுந்திருக்கவேண்டும்.

# 1. உருபில் வேற்றுமை — எழுவாய்

ஒரு வாக்கியத்தில் எழுவாயாக வரும் பெயரை—எழுவாயாக வந்து உருபேற்கும் ஆற்றல் இல்லாத பெயரை உருபில் வேற்றுமை என்போம். இதனை எழுவாய் வேற்றுமை, முதல் வேற்றுமை என்றும் கூறுவர்,

எழுவாய், திரிபில் பெயர் என்பர். இவ்வேற்றுமைப் பெயர் எத்தகைய வேற்றுமை உருபும் பெறும் ஆற்றல் இல்லாதது. இத-னால் உருபில்லாது வரும் பெயர்கள் எல்லாம் உருபில் வேற்றுமை என்பதாகாது. சில இடங்களில் ஐ உருபு இல்லாமல் ஐ வேற்றுமைப் பெயர் வரலாம். ஆனால் அவ்விடங்களில் வேண்டும்பொழுது ஐ உருபு கொடுத்தும் கூறலாம். எனவே அது உருபில் வேற்றுமை-யாக முடியாது.

1. அவள் அம்மா வீட்டிற்குப் போனாள்.

இதில் அவள் என்பது உருபில் வேற்றுமை. எழுவாய்ப் பொருளில் வந்திருக்கிறது. அம்மா என்பது உருபில் பெயராயினும், உருபில் வேற்றுமையாகாது. அது அம்மாவின், அம்மாவினுடைய வீட்டிற்கு என உருபு பெற்றும் வரமுடியும். இதே வாக்கியத்தில் அம்மா என்பதும் எழுவாயாக முடியும். அப்பொழுது, அது எந்த உருபும் பெற முடியாது. ஆனால் அப்பொழுது, அவள் என்ற பெயர் உருபு பெறும் ஆற்றலுடையதாகிறது — அவளுடைய அம்மா என்பது போல. எனவே இதில் அவள் என்ற பெயர் உருபில் வேற்றுமையாக முடியாது.

எழுவாயாக வரும்பொழுது வேற்றுமை உருபு இல்லாமல்தான் வரவேண்டும் என்பதில்லை.

2. எனக்குத் தலை வலிக்கிறது.

இவ்வாக்கியத்தில் எழுவாய் எது? தலை என்னும் பெயர் தலையை என்றும் வரமுடியும். ஆகையால் அது எழுவாயாக முடி-யாது. வலிக்கிறது என்பது அஃறிணை முடிவுடைய வினைமுற்றா-கையால், எனக்கு என்பது எழுவாயாக முடியாது. அதனால் இதனை எழுவாய் இல்லாத வாக்கியம் என்பர் (கு. பரமசிவம்).

வேறு, இல்லை, உண்டு என்பனபோல, வலிக்கிறது போன்ற வினைகள், அவை அஃறிணை விகுதியுடையனபோலத் தோன்றி-னும், ஐம்பால் மூவிடத்திற்கும் உரிய குறைவினை (Defective Verb) எனக் கொள்ளலாம். பசுவிற்குக் கால் வலிக்கிறது. நாய்க்கு என்-னைப் பிடிக்கிறது என்று இவ்வினைகள், அப்பெயர் அஃறிணை-யாக இருக்கும் பொழுதும் வருகின்றன. வலித்தல் தொழிலுக்கு உரியவன் நான், அல்லது பசு. எனவே 2-ஆவது வாக்கியத்தில் எனக்கு என்பதை எழுவாயாகக் கொள்ளலாம்.

எழுவாயை வரையறுப்பது சிக்கலான பிரச்சினை. பொருளை அடிப்படையாகக் கொண்டால், எழுவாய், வினைமுதல் (agent), உள்ளாகும் பொருள் (patient), கருவி (instrument) எனப் பல பொருள்களில் வரக்காணலாம்.

3. பையன் கதவைத் திறந்தான்.
   இங்குப் பையன், தொழிலைச் செய்யும் வினைமுதல் (agent).

4. கதவு திறந்தது.
   இங்குக் கதவு, திறத்தலைப் பெறும் பொருள் (patient object).

5. சாவி கதவைத் திறந்தது.
   இங்குச் சாவி கருவி (instrument). திறத்தலுக்குக் கருவி.

## 2. ஐ வேற்றுமை

ஐ வேற்றுமை, வாக்கியத்தில் நேரடிச் செயப்படுபொருளாகச் (Direct object) செயற்படும். வினையால் செய்யப்படும் பொருள், தொழிலுக்கு உள்ளாகும் பொருள் என்று கூறுவது எல்லாம் பாதிக்கப் படும் பொருள் என்று கூறலாம். அப்பாதிப்பு ஆக்கல், அழித்தல் முதலிய எதுவாகவும் இருக்கலாம். மன்னன் பழியை அஞ்சினான் என்னும்பொழுது அஞ்சுவதால் பாதிக்கப்படுவது பழி. பழியை மன்னன் செய்யவில்லை; செய்யாமையால் பாதிக்கப்படுவது பழி.

பொதுவாக, ஐ வேற்றுமை உருபு, உயர்திணைப் பெயர்-களோடு விரிந்தும், அஃறிணைப் பெயர்களோடு மறைந்தும் நிற்கும்

என்பர். இக்கருத்தும் பொருத்தமாகப்படவில்லை. பிரித்துக்கூறல், குறிப்பிட்டுக்கூறல், தேற்றம் இவை போன்ற பொருளைத் தரும் பொழுது ஐ உருபு விரிந்தும், மற்ற இடங்களில் தொக்கியும் வரும். Shanmugam Pillai 1965, 1971 ப. 32, 33). இதனை வேற்றுமை உருபு என்று கூறுவதைவிட, செயப்படுபொருளின் தோற்ற உருபு என்று கூறுவதே பொருந்தும்.

6. மனைவியைத் தேடுகிறான்.

7. மனைவி தேடுகிறான்.

இரண்டற்கும் உள்ள வேற்றுமையைக் காண்க. 6-ஆவது வாக்கியம் பெருங்கூட்டமொன்றில் தன் மனைவி எங்கோ நிற்கிறாள் என்று அவளைத் தேடுகிறான் என்பது போன்ற பொருளில் வரும். 7-ஆவது வாக்கியம், திருமணம் ஆகாதவன் மனைவியாக ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்கும் முயற்சியில் ஈடுபடும்பொழுது வரும். 6-ஆவது குறிப்பிட்ட ஒரு பெண்ணை, நிகழ்ச்சியைச் சுட்டும். 7-ஆவது வாக்கியம் பொதுவான ஒரு நிகழ்ச்சி. பெண் யாரென்று இன்னும் தெரியாது.

8. தோசை சாப்பிட்டான்.

9. தோசையைச் சாப்பிட்டான்.

இரண்டையும் ஒப்பிட்டுக் காண்க. 8-ஆவது வாக்கியம் ஒரு பொதுவான கூற்று. 9-ஆவது வாக்கியம் வேறொன்றும் சாப்பிடாமல் தோசையைச் சாப்பிட்டதைக் கூறும் கூற்று. இத்தகைய சில இடங்களில் ஐ வேற்றுமை உருபு விரிந்தே நிற்கும் Shanmugam Pillai 1971 ப. 36). அவற்றை அடுத்துக் காண்போம்.

1. மூவிடப் பெயர்களில் ஐ வேற்றுமை உருபு விரித்தே வரும்.

10. அதைக் கொடு.

11. அவன் உன்னை அடித்தான்.

2. அந்த, இந்த போன்ற சுட்டுப்பெயர், உடைமை இடப்பெயர், பெயரெச்சம் இவைகளை அடையாகப் பெற்று வரும் செயப்படுபொருள் பெயர்கள், ஐ உருபு பெற்றே வரும்.

12. அந்த மரத்தை வெட்டினான்.

13. என் பணத்தைக் கொடுங்கள்.

14. நான் கொடுத்த பணத்தைக் கொடுங்கள்.

இவற்றை, மரம் வெட்டினான், பணங்கொடுங்கள் என்பன-வற்றோடு ஒப்பிட்டுக்காண்க. இவற்றில் அவ்வடைகள் இல்லை. இவை பொதுவான கூற்றுக்கள்.

3. செயப்படுபொருளை, ஏதாவது ஒருவகையில் பிரித்துச் சிறப்பித்துக் கூறும் இடங்களில் இவ்வுருபு விரிந்து நிற்கும். 9, 10 ஆகிய வாக்கியங்களைக் காண்க.

4. மயக்கம் தோன்றும் இடங்களில், தெளிவுக்காக உருபு விரிந்தே வரும்.

15. தம்பி அடிக்கிறான்.

16. தம்பியை அடிக்கிறான்.

16-வது வாக்கியத்தில் ஐ உருபை விரித்துக் கூறவில்லை என்றால், தம்பி என்ற பெயர் எழுவாயாகச் செயற்பட முடியும். இத்தகைய இடங்களில் ஐ உருபு விரிந்தே வரும்.

## 3. கு வேற்றுமை

கு வேற்றுமைக்கு கு, க்கு, அக்கு, உக்கு இவை மாற்றுருபுகள்.

1. அக்கு, தன்மை, முன்னிலை, எதிரொலி இடப்பெயர் இவைகளோடு வரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| நான் | ——→ | என் + அக்கு | ——→ | எனக்கு |
| நீ | ——→ | உன் + அக்கு | ——→ | உனக்கு |
| தான் | ——→ | தன் + அக்கு | ——→ | தனக்கு |
| நாம் | ——→ | நம் + அக்கு | ——→ | நமக்கு |
| நீங்கள் | ——→ | உங்கள் + அக்கு | ——→ | உங்களுக்கு |
| தாம் | ——→ | தம் + அக்கு | ——→ | தமக்கு |

2. உயிர் இ, ஈ, ஐ, யகரமெய், இரட்டித்த அடைப்பொலிகள் க்கு, ச்சு, ட்டு, த்து, ப்பு, ற்று இவற்றின் பின் க்கு வரும். முன்

கூறிய அடைப்பொலிகள் இன் சாரியை பெற்றும் வரும். அப்பொழுது நிலை மொழி உகரம்கெடும்.

| | | |
|---|---|---|
| தம்பி → தம்பிக்கு | மக்கு + க்கு → மக்குக்கு | — மக்கிற்கு |
| ஈ → ஈக்கு | அச்சு + க்கு → அச்சுக்கு | — அச்சிற்கு |
| பனை → பனைக்கு | பூட்டு + க்கு → பூட்டுக்கு | — பூட்டிற்கு |
| தாய் → தாய்க்கு | பத்து + க்கு → பத்துக்கு | — பத்திற்கு |
| | காப்பு + க்கு → காப்புக்கு | — காப்பிற்கு |
| | மாற்று + க்கு → மாற்றுக்கு | — மாற்றிற்கு |

3. உயிர் ஆ, உ, ஊ இவற்றில் முடியும் பெயர்கள் இன் சாரியை பெறும்பொழுது கு உருபும், பெறாதபொழுது உக்கு உருபும் பெறும்.

| | | | | |
|---|---|---|---|---|
| அம்மா | + | இன் + கு | → | அம்மாவிற்கு |
| அம்மா | + | உக்கு | → | அம்மாவுக்கு |
| மண் | + | இன் + கு | → | மண்ணிற்கு |
| மண் | + | உக்கு | → | மண்ணுக்கு |
| பல் | + | இன் + கு | → | பல்லிற்கு |
| பல் | + | உக்கு | → | பல்லுக்கு |
| கதவு | + | இன் + கு | → | கதவிற்கு |
| கதவு | + | உக்கு | → | கதவுக்கு |
| பூ | + | இன் + கு | → | பூவிற்கு |
| பூ | + | உக்கு | → | பூவுக்கு |

4. மேற்கூறியவை தவிர, பிறமெய்களில் முடியும் பெயர்களோடு உக்கு வரும். சுட்டுப்பெயர் தவிர பிறபெயர்கள் இன் சாரியை பெற்றும் பெறாமலும் வரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| அவன் | → | அவனுக்கு | | |
| அவள் | → | அவளுக்கு | | |
| வயல் | → | வயலுக்கு | — | வயலிற்கு |
| வாள் | → | வாளுக்கு | — | வாளிற்கு |
| மான் | → | மானுக்கு | — | மானிற்கு |

கு வேற்றுமை, பல்வேறு பொருள்களில் வருவதைக் கீழே காண-லாம்.

### 1. மறைமுகச் செயப்படுபொருள்

கு வேற்றுமை, ஒரு பெயர் செயலின் பயனை நுகரும் மறை-முகச் செயப்படு பொருளாக வருகின்ற இயல்பைக் குறிக்கும் அன்-றியும் உயர்திணைப் பெயர் கு வேற்றுமையில் வரும்பொழுது, செ-யலின் நோக்கம் அப்பெயரைப் பொறுத்ததாகவே, அதைச் சென்-றடைவதாகவே இருக்கும்.

17. அவன் எனக்கு ஒரு கடிதம் கொடுத்தான்

17-ஆவது வாக்கியம் கடிதம் எனக்கே என்ற பொருளைத் தரும். அப்பொருளை மறைமுகச் செயப்படுபொருளில் வரும் கு கொடுக்கிறது. இப்பொருள் இல்லை என்றால், அதில் கு உருபு வரமுடியாது. அப்பொழுது அங்கு இடவேற்றுமை உருபே வரும்

18. அவன் என்னிடம் ஒரு கடிதம் கொடுத்தான்.

இங்குக் கடிதம் எனக்காகக் கொடுக்கப்படுதல் வேண்டாம். அது மூன்றாமவருக்கு என் மூலம் கொடுக்கப்பட வேண்டியதாகவும் இருக்கலாம்.

கு வேற்றுமை, உடைமைப்பொருளில் வரும்பொழுது, மறை-முகச் செயப்படுபொருளாகிய அப்பெயர், நிரந்தர உடைமைப் பொருளிலேயே (Permanent Possession) வரும். தற்காலிக உடைமைப் பொருளாயின் (Temporary Possession) இடவேற்றுமை உருபே வரும்.

19. எனக்கு இந்தப் புத்தகத்தைக் கொடுங்கள்.

20. என்னிடம் இந்தப் புத்தகத்தைக் கொடுங்கள்.

19—இல் புத்தகம் நிரந்தரமாக எனக்காகக் கொடுக்கப்படு-வது. 20-இல் புத்தகம் எனக்கு இல்லை. தற்காலிகமாக என்னிடம் அது இருக்கும். மற்றொருவனுக்குக் கொடுப்பதற்காக என்னிடம் கொடுக்கப்பட்ட புத்தகமாகவும் இருக்கலாம்.

### 2. செலவின் இலக்கு

போ, செல், வா போன்று இயக்கத்தைக் குறிக்கும் வினை-

யின் இலக்காக கு வேற்றுமைப்பெயர் வரும். இப்பொருளில் வரும் பெயர் அஃறிணைப் பெயராகவே இருக்கும்.

21. அவன் ஊருக்குப் போனான்.

22. நீங்கள் எங்கள் வீட்டுற்கு வாருங்கள்.

இடப்பெயர், கு உருபு பெறாமலும் இப்பொருளில் வரும்.

23. அவன் சென்னை சென்றான்.

24. அவன் சென்னைக்குச் சென்றான்.

உயர்திணைப்பெயர் இலக்குப் பொருளில் வருமாயின், அது கு வேற்றுமை உருபு ஏற்பதில்லை. இடவேற்றுமையில் வரும்.

25. அவன் அம்மாவிடம் போனான்.

26. என்னிடம் வராதே.

## 3. நோக்கம்

நமது இலக்கண நூலார் இதனைப் பொருட்டு என்பர்.

27. அவன் பணத்திற்கு வேலை செய்தான்.

28. உடல் வலிக்கு டானிக் சாப்பிட்டான்.

## 4.0 சார்த்திக்கூறல் (Reference Point)

இவ்வேற்றுமையின் அடிப்படைப்பொருள், ஒன்று மற்றொன்றோடு கொள்ளும் தொடர்பை விளக்குவது என்று கூறலாம். கு உருபேற்ற பெயர்கள், வினையோடு மட்டுமன்றி மற்ற சொற்களோடும் இணைந்து வரும். இவ்வாறு வரும் சொற்கள் பெரும்பாலும் சொல்லுருபுகள் (Post Positions) எனலாம். இவைகளில் பெரும்பான்மையானவை பெயர்ச் சொற்களே. இவ்வாறு அடுத்து வருகின்ற சொல்லோடு காலம், இடம், திசை, தூரம், ஒப்பீடு ஆகிய பொருள்களில் தொடர்பு கொள்ளும். இப்பொருளைக் குறிக்கும் சொற்கள் கு உருபுபேற்று வந்து, அடுத்து, அதோடு கொள்ளும் தொடர்பை விளக்கும் சொற்கள் சொல்லுருபுகளாக வரும்.

### 4.1 காலம்

29. ஐந்து மணிக்கு அப்புறம் வாருங்கள்.

### 4.2 இடம்

30. கோவிலுக்கு நடுவில் குளம்.

31. வீட்டிற்குப் பின்னால் ஒரு பந்தல் போட்டிருக்கிறார்கள்.

### 4.3 திசை

32. தமிழ் நாட்டிற்குக் மேற்கே கேரளம்.

### 4.4 தூரம்

33. சென்னைக்கு 150 கிலோ மீட்டர் தூரத்தில் புதுவை இருக்கிறது.

இவற்றில் 30, 31, 32 வாக்கியங்களில், கு உருபிற்குப் பதில், இன் உருபும் வரலாம். கோவிலின் நடுவில், வீட்டின் பின்னால், தமிழ்நாட்டின் மேற்கே என வருதல் காண்க.

### 4.5 இரண்டு பொருள்களிடையே தொடர்பு

இரண்டு பொருள்களிடையே நிகழும் ஒரு செயலைக் குறிப்பிட இரண்டு பெயரும் கு உருபேற்று, தொடர்பினை விளக்கும் சொல்லோடு முடியும். ஆங்கிலத்தில் வருகின்ற between என்பதற்கு நேரானது இது அப் பெயர்களோடு, இடையே/இடையில் என்ற சொல்லுருபுகளை இணைத்தும் கூறலாம்.

34. அம்மாவிற்கும் அப்பாவிற்கும் இடையே/இடையில் சண்டை.

35. அம்மாவிற்கும் அப்பாவிற்கும் சண்டை.

### 5. ஒப்பிடு

ஒன்றின் ஒன்று மேலானது, கீழானது என்னும் பொருளில் வருவதும் சார்த்திக் கூறலே. ஆனால் இதில் சொல்லுருபு வருவதில்லை.

36. எனக்கு அவன் நல்லவன்/கெட்டவன்.

37. அம்மாவிற்கு மகள் உயரம்/குட்டை.

இதனை என்னைவிட அவன் நல்லவன்/கெட்டவன்; அம்மாவைவிட மகள் உயரம்/குட்டை என்றும் கூறலாம்.

6. உடைமை (Possessive)

ஆங்கிலத்தில் X has/has not Y என்பதைப் போன்ற பொருளைப் பெற இவ்வேற்றுமைப்பெயர் பயன்படுகிறது. X இருக்கும் இடத்தில், தமிழில் கு வேற்றுமைப் பெயர் வரும். அப்பெயரே உடைமையைப் பெறும். உடைமையாகும் பொருள் எழுவாயாக வந்து, அதற்கேற்ற பயனிலையாக இரு, கிடை, உண்டு இல்லை என்பன வரும்.

38. எனக்கு ஒரு புத்தகம் இருக்கிறது.

உடைமையாகும் பொருள் எழுவாயாகவும், உடைமை பெறும் பெயர் கு வேற்றுமையிலும் வருகிறது. ஆங்கிலத்தில் எழுவாயாக I have a book என்பதில் வரும் பெயர், தமிழில் உடைமையை ஏற்கும் பெயராக வருவதால், அது மறைமுகச் செயப்படு பொருளாகக் கு வேற்றுமையில் வருகிறது என்போம். ஆங்கிலத்தில் வரும் செயப்படு பொருள் - book அதாவது உடை-மையாகும் பொருள், தமிழில் எழுவாயாக வருகிறது. ஒரு புத்தகம் எனக்கு உரிமையுடையதாக இருக்கிறது என்பது தமிழ் வாக்கியத்-தின் பொருள் அமைப்பு. இவற்றின் வினைமுற்றாக, இரு, கிடை, உண்டு, இல்லை இவற்றில் ஒன்று வரலாம்.

இவ்வகையில் மேலும் சில வாக்கியங்களைக் காண்க.

39. அவனுக்கு ஒரு மகள் இருக்கிறாள்.

40. அவர்களுக்கு ஒரு வீடு கிடைத்தது.

41. உனக்கு நான் கணவனாகக் கிடைத்தேன்.

42. நாய்க்கு வால் உண்டு.

43 மனிதனுக்கு வால் இல்லை.

தமிழில் தற்காலிக உரிமை, நிரந்தர உரிமை என்ற இரண்டும் வேறுபடுத்திக் காட்டப்படுகின்றன. நிரந்தர உரிமையுடையதைக் கு வேற்றுமையாலும், தற்காலிக உரிமையுடையதை இட வேற்றுமை-யாலும் கூறுகிறோம்.

44. அவளுக்கு மூன்று குழந்தைகள்.

45. அவளிடம் மூன்று குழந்தைகள்.

45 ஆவது வாக்கியத்தில் இருக்கும் குழந்தைகள் அவளுடையதாக இருக்க வேண்டும் என்பதில்லை. வேறொருவருடைய மூன்று குழந்தைகளாகவும் இருக்கலாம். 44 -'இல் மூன்றும் அவள் பெற்ற குழந்தைகள்.

இப்பொருளில் எதிர்மறையில் இல்லை, கிடைக்காது, கிடைக்கவில்லை போன்ற வினைகள் வரும். கீழே சில எடுத்துக்காட்டுகளைக் காண்க.

46. என்னிடம் இப்பொழுது பணம் இல்லை.

இந்தச் சமயத்தில் என்னிடம் பணம் இல்லை என்பது இதன் பொருள். ஆனால், நான் போதுமான பணம் உடையவன்தான்.

47. அவனுக்குச் சிறிதும் புத்தி கிடையாது.

48. தம்பிக்கு ஒன்றும் கிடைக்காது.

49 அவனுக்குப் பணம் கிடைக்கவில்லை.

ஆங்கிலத்தில் உடைமைப் பொருளைச் சமநிலை உடைமைத் தொடரால் (Equational Possessive Construction) விளக்குகிறோம். Y is X's — The book is Velu's அல்லது Y is X's Y — It is Velu's book என்று வாக்கியங்கள் வரும். இதில் NP NP என்று, இரண்டு பெயர்த்தொடர்கள் வருகின்றன. எழுவாய் ஒரு பெயர்த் தொடர்-பெதோ; பயனிலை மற்றொரு பெயர்த் தொடர். தமிழில் X Y என்று வரும் வாக்கியத்தில், X எழுவாயாகவும், Y பயனிலையாகவும் வரும். Y - இல் உடைமையை ஏற்கும் பெயர், கு வேற்றுமையில் வரும்.

50. இது அப்பாவுக்குப் புத்தகம்
    பெதோ பெதோ

50-ஆவது வாக்கியத்தில் எழுவாய் இடப்பெயராக, சுட்டாக வரும். மேலும் சில வாக்கியங்களைக் காண்க.

51. அவள் எங்களுக்கு மகள்.

52. இவர் அவருக்கு மாமா.

53. அது உனக்கு வீடு.

மேலே கூறிய வாக்கியங்கள் (50—53) கு உருபு இன்றியும் அது வேற்றுமையிலும் வருதல் இயலும்.

54. அவள் எங்கள் / எங்களது / எங்களுக்கு மகள்.

55. இது உன் / உனது / உனக்கு வீடு.

## 7. அனுபவத்தைப் பெறும் எழுவாய்

கு வேற்றுமைப் பெயர், அல்லது பெயர்த்தொடர், வினையின் பயனைப் பெறுவதாகவோ உடைமை போன்ற ஒரு தகுதியைப் பெறுவதாகவோ அமையும் என்று முன்பு கூறினோம். இப்பெயர் உணர்ச்சி, மனநிலை இவற்றைப் பெறுவதாகவும் அமையலாம். அப்பொழுது இப்பெயர்கள் தெரி, பிடி, புரி, வலி என்பன போன்ற குறைவினைகளைப் (Defective Verbs) பெற்று வரும். உடைமைக்கும் இதற்கும் உள்ள வேறுபாடு இங்கு இப்பெயர்த் தொடரியல் எழுவாயாகச் செயற்படுவது. தமிழில், எழுவாயை வேற்றுமையின் அடிப்படையில் பிரித்துக் காணுதல் கடினம். தொடரியலில் செயற்படும் முறையைப் பொறுத்தே அதனைக் காணவேண்டும்.

56. அவனுக்கு என்னைத் தெரியும்.

இங்கு அவனுக்கு என்பது மறைமுக எழுவாய்.

## 8. காலம்

கு உருபேற்ற காலப்பெயர்கள் குறிப்பிட்ட ஒரு காலத்தையோ (Point of Time) அல்லது தொடர்ந்து வருகின்ற மொத்த காலத்தையோ (Duration of Time) குறித்து வரும்.

57. அவன் பத்து மணிக்கு ஆபீசுக்குப் போகிறான்.
பத்து மணிக்கு என்பது குறிப்பிட்ட ஒரு காலப்பொழுது.

58. அவன் வாரத்தில் அய்ந்து நாளைக்கு வேலை செய்கிறான். இங்கு அய்ந்து நாளைக்கு என்பது மொத்த நேரம்,

மொத்த நேரத்தைக் குறிப்பிட்டு மணி, நிமிடம், இவற்றை அடுத்து நேரம் என்பது கட்டாயம் வருதல் வேண்டும். இது கு உருபு பெற்றும் பெறாமலும் வரும். பெறாமல் வருவதே பெரும்பான்மை வழக்கு. ஆனால் குறிப்பிட்ட காலத்தைச் சுட்டும்பொழுது உருபு பெற்றே வரவேண்டும் (கு. பரமசிவம் 152).

59 அவன் ஐந்து மணி நேரத்திற்கு வேலை செய்தான்.

60. அவன் ஐந்து மணி நேரம் வேலை செய்தான்.

61. அவன் ஐந்து மணிக்கு வேலைக்கு வந்தான்.

62. இன்று 8 மணி நேரத்திற்குத் தூங்கினேன்.

63. இன்று 8 மணி நேரம் தூங்கினேன்.

64. இன்று 8 மணிக்குத் தூங்கினேன்.

## 9. *விகிதப் பொருத்தம்* (Proportion)

கு உருபேற்ற பெயரை அடுத்து எண்ணுப்பெயர் வந்து விகிதப் பொருளைத் தரும்.

65. மருந்து ஒரு நாளைக்கு மூன்று வேளை சாப்பிட வேண்டும்.

66. மாதத்திற்கு ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறான்.

65,66 - இல் உருபு தொக்கியும் வரலாம்.

67. மருந்து ஒரு நாள் மூன்று வேளை சாப்பிட வேண்டும்.

68. மாதம் ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறான்.

## 10. *பகிர்தல்* (Distribution)

கு உருபேற்ற பெயரை அடுத்து எண்ணுப்பெயர் வந்து ஒவ்வொன்றற்கு இத்தனை என்பது போன்ற பொருளில் வரும்.

69. ஆளுக்கு ஒரு டீ போடு.

70. பக்கத்துக்கு மூன்று மரங்கள் நிற்கின்றன.

இங்குக் கு உருபு தொக்கி வராது.

**11. *ஏற்புடைமை* (Appropriateness)**

ஒன்றற்கு மற்றொன்று ஏற்றது என்ற பொருளில் வரும்.

71. கூலிக்கு வேலை.
72. கொடைக்குக் கர்ணன்.
73. நோய்க்கு ஊசி
74. இருமலுக்கு விக்ஸ் பார்முலா 44.

**12 *விழுக்காடு* (Fraction, Ratio)**

எண்ணுப்பெயர்கள் கு உருபேற்று இப்பொருளில் வரும்.

75. நாள் ஒன்றற்கு எட்டு மணிநேரம் வேலை.
76. ஐந்திற்கு இரண்டு பழுதில்லை

**13. *உறவு* (Genetive)**

கு உருபேற்ற பெயரை அடுத்து உறவுமுறைப்பெயர், அல்லது உறவினை விளக்கும் தொடர்கள் வரும்பொழுது இப்பொருளைத் தருகிறது.

77. முருகனுக்கு மனைவி வள்ளி.
78. எனக்கு இங்கு யாரும் சொந்தம் இல்லை.
79. எனக்கு மாணவன் முருகன்.
80. எனக்கு முருகன் மாணவன் இல்லை.

கு வேற்றுமைக்குப் பதில் அது வேற்றுமையும் வரலாம்.

81. முருகனது மனைவி வள்ளி.
82. இங்கு யாரும் எனது சொந்தம் இல்லை.
83. எனது மாணவன் முருகன்.
84. முருகன் எனது மாணவன் இல்லை.

❋❋❋

## 4. ஆல் வேற்றுமை

இதனைக் கருவி வேற்றுமை என்பர். ஆனால் இது கருவிப் பொருளில் மட்டும் வருவதன்று. இதில் பெயர்கள் ஆல் உருபேற்று வரும். மரத்தால், வீட்டால், ஆற்றால், தெருவால் என வருதல் காண்க.

ஆல் உருபே அன்றிக் கொண்டு, வைத்து, மூலம் என்ற சொற்களும் ஆல்வேற்றுமைப் பொருளில் வரும். இவற்றில் கொண்டு, வைத்து இவற்றின் முன் வரும் பெயர், ஐ வேற்றுமை உருபேற்றும்' ஏற்காமலும் வரும். மூலம் என்பதன் முன் வரும் பெயர் இன் வேற்றுமை உருபேற்றும், ஏற்காமலும் வரலாம். சாவி கொண்டு/ வைத்து; சாவியைக்கொண்டு/வைத்து என்றும், சாவி/சாவியின் மூலம் என்றும் வருதல் காண்க

ஆல் வேற்றுமை (1) கருவி (instrument); (2) வழிமுறை (means); (3) மூலம்-முதற்காரணம் (source and material); (4) காரிய காரணம் (cause); (5) காரணம் (reason); (6) செய்பவன் (agent) ஆகிய பொருளில் வரும்.

## 1. *கருவி* (Instrument)

ஆல் உருபேற்று வரும் பெயர், அந்நிகழ்ச்சியில் பயன்படும் கருவியாக வரும்.

85. நான் கோடாலியால் மரத்தை வெட்டினேன்.
86. நான் சாவியால் கதவைத் திறந்தேன்.
87. அவன் கத்திகொண்டு/கத்தியைக்கொண்டு பழத்தை வெட்டினான்.
88. நான் சாவிகொண்டு/சாவியைக்கொண்டு கதவைத் திறந்தேன்.
89. நான் சாவி/சாவியின் மூலம் கதவைத் திறந்தேன்.

## 2. *வழிமுறை* (Means)

இது, ஒரு செயல் பல்வேறு முறைகளில் நிகழுமாயினும், குறிப்பிட்டு ஒரு முறையைக் கையாண்டு நிகழ்ந்த வழிமுறையைக் கூறும். கருவி உருவுடைய ஆயுதம். அதைப் பிறர் பயன்படுத்து-வர். இது பெரும்பாலும் உருவற்றது. தன் வயமானது.

90. அவன் தன் புத்தியால் தப்பி ஓடிவிட்டான்.
91. நான் அதை என் கண்களால் பார்த்தேன்.
92. அவன் தன் அறிவால் கண்டான்.

## 3. மூலம் — முதற்காரணம் (Source and material)

மூலப்பொருள் மற்றொன்றாக மாறும்பொழுது —முதற்காரணப் பொருளில், அவ்வாறு மாறும் பொருள் ஆல் உருபேற்கும்.

93. அரசன் கருங்கல்லால் கோயில் கட்டினான்.

94 குயவன் களிமண்ணால் பொம்மை செய்தான்.

இப்பொருளிலும் கொண்டு, வைத்து, மூலம் இவை வரலாம். ஆனால் அவ்வழக்கு சிறுபான்மை.

## 4 காரியகாரணம (Cause)

ஆங்கிலத்தில் வருகின்ற cause, reason என்ற இரண்டும் தமிழில் காரணம் என்ற ஒன்றிலேயே அடங்குகிறது. முதல் தொழில் நடந்தால் இரண்டாவது தொழில் நடக்கும். முதல் தொழில் நடக்கவில்லை என்றால் இரண்டாவது தொழில் நடக்காது இத்தகைய இடங்களில் முதல் தொழிலே cause என்கிறோம். (கு.பரமசிவம் ப.142). தமிழில் இதனைக்காரிய காரணம் என்போம். இக்காரணத்தால் காரியம் கட்டாயம் நடைபெறும்.

95. வெயிலால் அவளுக்கு மயக்கம் வரும்.

96. அவனால் ஆபீசுக்குத் தாமதித்து வந்தேன்.

97. என் நண்பனால் உதை வாங்கினேன்,

இங்கெல்லாம், வெயில் அவளுக்கு மயக்கம் கொடுப்பதும், நான் தாமதித்து வந்ததற்கு அவன் காரணம் என்பதும், நான் உதை வாங்கினதற்கு நண்பன் காரணம் என்பதும், இவை இல்லை என்றால் அக்காரியம் நிகழ்ந்திருக்காது என்பதும் பொருள்.

கொண்டு, வைத்து, மூலம் என்பன காரிய காரணத்தில் வாரா.

## 5 காரணம் (Reason)

இங்கு முதல் தொழில் நிகழ்ந்தால் இரண்டாவது தொழில் கட்டாயம் நிகழ வேண்டும் என்பதில்லை,

98. தலை வலியால் இன்று ஆபீஸ் போகவில்லை.

இங்குக் கொண்டு, வைத்து, என்பன வரும்.

99. தலை வலித்ததைக் கொண்டு இன்று ஆபீஸ் போக வில்லை.

100. தலை வலித்ததை வைத்து இன்று ஆபீஸ் போக வில்லை.

101. சிகரட் குடித்ததால் புற்றுநோய் வந்தது.

என்பது

சிகரெட் குடித்ததைக் கொண்டு/வைத்து என்று வராது 101-வது வாக்கியம் காரியகாரணப் பொருளில் வருகிறது.

6. *செய்பவன்* (Agent)

செயப்பாட்டு வாசகங்களில் ஆல் உருபேற்ற பெயர் செய்பவனாக வரும். ஆனால் இது அருகிய வழக்கு.

102. அவன் அப்பாவால் அடிபட்டான்.

இங்கு அடித்தல் தொழிலுக்கு உரியவர் அப்பா.



## 5 ஒடு வேற்றுமை

ஒடு வேற்றுமை உடனிகழ்ச்சிப் பொருளில் வருகிறது. இதன் உருபு ஒடு. பழந்தமிழில் ஒடு, ஆன் என்பனவும் உருபுகளாகப் பயன்பட்டிருக்கின்றன. இக்காலத் தமிழில், கூட, உடன் என்பனவும் உருபுகளாக வருகின்றன. நமது இலக்கண நூலார் இதனை மூன்றாம் வேற்றுமையில் அடக்குவர்.

ஒடு வேற்றுமை (1) உடனிகழ்ச்சி; (2) உடனிருப்பு; (3) இணைப்பு (addition); (4) இடம் (location); (5) உள்ளடக்கும் எல்லை (inclusive boundary); (6) வழி (means) ஆகிய இப்பொருள்களில் வரும்.

1. *உடனிகழ்ச்சி* (Simultaneous accompaniment)

எழுவாயும் ஒடு வேற்றுமைப் பெயரும் ஒரே சமயத்தில், ஒன்றாகச் செய்யும் ஒரே வேலையைக் குறிப்பிடும்.

103. வேலன் தன் மனைவியோடு வந்தான்.

104. பேனாவோடு புத்தகமும் பறிபோயிற்று.

வேலனும் அவன் மனைவியும் ஒரே சமயத்தில் ஒன்றாக வந்தனர். பேனாவும் புத்தகமும் ஒரே சமயத்தில் ஒன்றாகப் பறிபோயின. வருதல் தொழிலும், பறிபோதல் தொழிலும் முறையே இருவருக்கும், இரண்டு பொருளுக்கும் உரியன. இத்தகைய சூழ் நிலைகளிலேயே ஓடு உருபை உடனிகழ்ச்சிப் பொருளில் பயன் படுத்துகிறோம்.

மேலே உள்ள வாக்கியங்களில் உம் உருபைப் பயன்படுத்தி-னால், அப்பொழுது இவ்வினைகள் ஒரே காலத்தில் நிகழ வேண்டும் என்ற கட்டுப்பாடில்லை; வெவ்வேறு காலங்களில் நிகழ்ந்தவை-களாகவும் இருக்கலாம்.

105. வேலனும் அவன் மனைவியும் வந்தார்கள்.

106. பேனாவும் புத்தகமும் பறிபோயின.

இவற்றில், வேலனும் அவன் மனைவியும் வெவ்வேறு நாட்-களில் வந்திருக்கலாம். பேனாவும் புத்தகமும் வெவ்வேறு நாட்-களில் பறிபோயிருக்கலாம்.

அன்றியும் உம் உருபு கொடுத்துக் கூறும்பொழுது, அஃறிணைப் பெயரும் உயர்திணைப் பெயரும் கலந்து வருமாயின் வினைமுற்று எவ்வாறு அமையவேண்டும் என்ற ஐயம் எழுகிறது.

107. வேலனோடு நாய் வந்தது.

என்பதை

108. வேலனும் நாயும் வந்தார்கள்.

என்பதா

109. வேலனும் நாயும் வந்தன.

என்பதா?

எதற்குச் சிறப்புக் கொடுக்கிறோமோ அதற்குரிய வினை முற்றைக் கொடுக்க வேண்டும் என்பார்கள் உரையாசிரியர்கள். ஆனால் பெரும்பாலோர் இன்று இதனைப் பின்பற்றுவதில்லை.

எது வினைமுற்றுக்கு முன்பு வருகிறதோ அதற்குரிய வினை முற்றையே கொடுத்துவிடுகின்றனர். 105-இல் நாய் என்பது வினை முற்றின்முன் வருவதால் அப்படியே பலர் எழுதுகின்றனர்.

## 2. உடனிருப்பு (Simultaneous presence)

உடனிருப்பில், ஒன்று செய்யும் வினையின்போது மற்றொன்று உடன் இருக்கும்; ஆனால் அது அவ்வினையைச் செய்யாது.

110. வருத்தத்தோடு வீடு திரும்பினான்.

111. புன்முறுவலோடு பேசினான்.

இதனை உம் கொடுத்துக் கூறமுடியாது.

## 3. இணைப்பு (Addition)

112. நான்கு இட்லியோடு இரண்டு தோசையும் சாப்பிட்டான்.

113. ஒரு கிலோ சர்க்கரையோடு இரண்டு பாக்கட் டீ தூளும் கொடு

இவை ஒன்றற்குமேல் மற்றொன்று என்ற பொருள் தருகிறது. இது எண்ணும்மை பெற்றும் வரமுடியும். அப்பொழுது பொருள் வேறுபாடு எதுவும் இல்லை.

114. நான்கு இட்லியும் இரண்டு தோசையும் சாப்பிட்டான்.

115. ஒரு கிலோ சர்க்கரையும் இரண்டு பாக்கட் டீ தூளும் கொடு.

## 4. இடம் (Location)

ஓடு வேற்றுமை இடப்பொருளையும் தருகிறது. இடப்பொருளைத் தரும் இல் வேற்றுமையில் இருந்து மாறுபட்டு, இது நிரந்தரமான இடப்பொருளைத் தரும். இல் வேற்றுமை தற்காலிகமானதும், நிரந்தரமானதும் ஆகிய இரு பொருளிலும் வரும்.

116. அவன் எங்கள் வீட்டோடு இருக்கிறான்.

இது நிரந்தரமாக எங்களோடு இருப்பதைச் சுட்டுகிறது.

## 5. உள்ளடக்கும் எல்லை (Inclusive boundary)

ஒன்றைக் குறிப்பிட்டு, அது மற்றொன்றற்கு எல்லையாக அதனுள் அடங்கியதைச் சுட்டும் பொருளில் ஓடு உருபு வரும். இவ்வெல்லை காலம், இடம் இரண்டிலும் இருக்கலாம்.

117. சித்திரை மாதத்தோடு தமிழ் ஆண்டு தொடங்குகிறது.

தமிழ் ஆண்டின் தொடக்க எல்லை சித்திரை மாதம். அதுவும் ஆண்டினுள் அடங்கியது. இது கால எல்லை.

மேலும் சில எடுத்துக்காட்டுகள்

118. இன்றோடு பதினாறு வயது முடிகிறது.

119. இன்று ஐந்து மணியோடு ஓய்வு பெறுகிறேன்.

120. ஞாயிற்றுக் கிழமையோடு இந்த வேலை முடியும்.

இட எல்லைக்கு

121. மதுரையோடு என் பயணம் முடியும்.

## 6. வழி (Means)

ஒரு செயல் நிகழ்வதற்குரிய வழியைச் சுட்டும்.

122. அவன் உதவியோடு இதைப் படித்தேன்.

123. தெருவோடு நடந்து போனான்.

## 7. முடிவு

சரி என்பதால் முடியும் வாக்கியத்தில், அதன் முன்பு ஓடு வேற்றுமைப்பெயர் வரும்பொழுது, அதற்குமேல் ஒன்றும் இல்லை என்ற பொருளில் வரும். சரி என்பது முடிவுப்பொருளைத் தருகிறது. ஓடு உருபு ஏற்கும்பெயரே எழுவாயாக வரும்பொழுது, எழுவாய் தொக்கி நிற்கும்.

124. இந்தப் பள்ளிக்கூடத்தில் ஐந்தாவது வகுப்போடு சரி.

125. சித்திரை மாதத்தோடு நமது உடன்பாடு சரி.

126. போனமாதம் அவனைப் பார்த்ததோடு சரி.

124-இல் வகுப்பும், 126-இல் பாாத்தலும் எழுவாய்; அவை தொக்கி நிற்கின்றன. பள்ளிக்கூடத்தில் ஐந்தாவது வகுப்போடு வகுப்புகள் சரி என்றும், போன மாதம் அவனைப் பார்த்ததோடு பார்த்தது சரி என்றும் இவ்வாக்கியங்களை விரித்துக் கூறலாம்.



## 6. இட வேற்றுமை

இவ்வேற்றுமைக்கு இடம், இல், ஏ என்று மூன்று உருபுகள் வருகின்றன. இடம் என்பது இடத்தில் (இடம்+இல்) எனவும் வரலாம். ஏ உருபு கேள்விக்குரியது. அதனை முதலில் விளக்குவோம்.

### *இடவேற்றுமை உருபு ஏ*

திசைப் பெயர்களோடும், சில இடப்பெயர்களோடும் வரும் ஏகாரத்தை இடவேற்றுமை உருபாகவே கருதவேண்டி இருக்கிறது.

| | |
|---|---|
| வடக்கு | வடக்கே |
| தெற்கு | தெற்கே |
| கிழக்கு | கிழக்கே |
| மேற்கு | மேற்கே |
| மேல் | மேலே |
| உள் | உள்ளே |
| இங்கு | இங்கே |
| அங்கு | அங்கே |

சாதாரணமாக இச்சொற்களில் வருகின்ற ஏகாரத்தைத் தேற்றேகாரம் என்று கூறுகின்றனர். ஆனால் வடக்கேயே, மேற்கேயே, இங்கேயே என்பது போல, அதன் மேலும் தேற்றேகாரம் வருகிறது. எனவே தேற்றேகாரம் இருமுறை வந்தது என்பது பொருந்தாது. இதனால் சிலர், முதல் ஏகாரத்தை ஓசை நயத்திற்காக வந்த அசை என்பர். அதாவது மெய்யெழுத்தில் முடியும் இச்சொற்கள் இறுதியில் ஏகாரம் பெற்று வந்தன என்பர். அதுவும் பொருந்தாது. இவ்வாறு ஓசை நயத்திற்குப் பெரும்பாலும் உகரமே வரும். வடக்கு,

கிழக்கு என்பன உகரத்தில் முடிந்த சொற்கள். இங்கு ஏகாரம் இடவேற்றுமை உருபு எனக் கொள்வதே பொருந்தும். காரணங்களைக் காண்போம்.

வடக்கில், தெற்கில், மேற்கில், கிழக்கில் என்று இடப்பெயர்கள் ஏகாரத்திற்குப் பதில் இல் உருபும் பெறமுடியும். மற்ற பெயர்களைப்போல, ஒப்புமை ஆக்கத்தால் இல் உருபை இங்குப் பெறுகின்றன எனலாம். வடக்கில் பார், தெற்கில் போ என்பன போன்ற வழக்கைக் காண்க. ஈழநாட்டில், வடக்கால் போனான், என ஆல் வேற்றுமை உருபு கொடுத்துப் பேசுவர். வடக்கைப்பார் என ஐ வேற்றுமையிலும் வருகிறது. வடக்கிலிருந்து— வடக்கேயிருந்து என்று நீக்கல் பொருளில் ஏயிருந்து, இலிருந்து என்று ஏ, இல் என்ற இரண்டு உருபுகளும் வருதல் காணலாம். இல் வரும்பொழுது ஏ வருதல் இல்லை. இவ்வாறு பிற வேற்றுமை உருபு வரும்பொழுது ஏ வருதல் இல்லை. இக்காரணங்களால், ஏ இடவேற்றுமை உருபு எனவே கொள்ள வேண்டும். இவ்வுருபு சில பெயர்களுடனேயே வரும். அப்பெயர்களும் எல்லா வேற்றுமை உருபுகளையும் ஏற்பதில்லை. சில வேற்றுமை உருபுகளையே ஏற்கும். பெயர்களில் இவை ஒரு தனி வகை.

பொதுவாக, இல் உருபு உயிரிலாப் பெயர்களுடன் வரும் எனவும், உயிருடைய பெயர்களுடன் இல், இடம் இரண்டும் வரும் என்றும் கூறலாம். ஆனால் உயிருடைய பெயர்களுடன் இல் எப்பொழுது வரும், இடம் எப்பொழுது வரும் எனக்கண்டு விளக்கியவர் கு பரமசிவம் (ப. 170, 171). உயிருடைப் பொருள், இனத்தைக் குறிக்கும்பொழுது, அல்லது ஒரு குழுவைக்குறிக்கும் பொழுது இல் உருபும், தனி உயிரைக் குறிக்கும்பொழுது இடம் உருபும் வரும்.

127. அவனெல்லாம் பிராமணனில் சேர்த்தியா ?

128. குரங்கில் 197 வகை உண்டு.

129. பெண்களில் இவள் ஒரு மாதிரி.

இவை இனத்தைக் குறித்து வந்தன.

130. பிராமணனிடம் வேதம் கேட்கலாம்.

131. குரங்கிடம் விளையாடாதே

132. பெண்களிடம் கவனமாய் நடந்து கொள்ள வேண்டும்,

இவை தனிப்பட்டவை, தனிப்பட்டவர்களைக் குறித்து வந்தன.

உயர்திணையில் இப்பாகுபாடு பொருந்தி வந்தாலும், அஃறிணை உயிருடைய பெயரோடு பொருந்துவதில்லை.

133. மன்மதனின் அம்பு கழுதையில் தைத்தது.

இங்கு அஃறிணை தனி உயிருடைப் பொருளோடு (கழுதையில்) இல் வருகிறது. மேலும் இதில் இடம் என்ற உருபு வரவும் முடியாது.

இதைப்பற்றிய தெளிவு மேலும் ஆய்வுகள் மூலந்தான் கிடைக்கவேண்டும்.

இடவேற்றுமை உயிரிலாப்பெயரோடு (1) காலம், இடம் இவற்றின் இடம்; (2) வழி-கருவி (means and instrumental); (3) நிகழ்முறை (mode), ஆகிய இப்பொருளிலும், உயிருடைப் பெயர் உயிரிலாப் பொருள் இரண்டிலும்; (4) இனத்தில் பிரித்துக் காட்டல் என்ற பொருளிலும், உயிருடைப் பொருளாடு; (5) தற்காலிக உடைமை (temporary possession), (6) புடைபெயர்ச்சியின் நோக்கம்; (7) உணர்ச்சியைப் பெறும் பொருள்; (8) மூலம் (source) ஆகிய இப்பொருள்களிலும் வரும்.

5,6,7,8 ஆகியவற்றில் இடம் என்ற உருபு வரும்.

## I. இடம்

உயிரில்லாப்பெயர்களோடு இல் உருபு வந்து இடப்பொருளைத் தரும்.

134 குருவி மரத்தில் இருக்கிறது.

135 அந்தத் தெருவில் நிறைய கடைகள் இருக்கின்றன.

காலப்பெயர்களோடு இடவேற்றுமை உருபு வரும்பொழுது, வினைமுற்று எதிர்காலத்தில் இருக்குமாயின் கால எல்லையையும், இறந்த காலமாயின் காலப்பரப்பையும் (duration of time) குறிக்கும்.

136. ஒரு வாரத்தில் இந்த வேலையை முடித்துவிடுவேன்.

137. பத்து நாளில் ஊருக்குப் போகவேண்டும்.

இவை இரண்டும் குறிப்பிட்ட ஒரு கால எல்லையைச் சுட்டும். பத்து நாளில் ஊருக்குப் போனேன், என்று இறந்த காலத்திலும் வருகிறது. ஆனால்

138. பத்து நாளில் வேலையை முடித்தேன்.

என வரும்பொழுது, பத்து நாட்களாகிய ஒரு காலப் பரப்பைச் சுட்டுகிறது.

காலப் பொருளைக் கு வேற்றுமையும் தரும். இரண்டற்கும் இடையே உள்ள வேறுபாட்டைக் காண்க.

139. a அவன் ஒரு வருடம் தமிழ் படித்தான்.

139. b அவன் ஒரு வருடத்திற்குத் தமிழ் படித்தான்.

139. c அவன் ஒரு வருடத்தில் தமிழ் படித்தான்.

140. a அவன் ஐந்து நிமிடம் வருவான்.

140. b அவன் ஐந்து நிமிடத்திற்கு வருவான்.

140. c அவன் ஐந்து நிமிடத்தில் வருவான்.

139, 140 ஆகிய வாக்கியங்களில் இரண்டும் கு வேற்றுமையிலும் இடவேற்றுமையிலும் வருகின்றன. a வாக்கியங்களில் கு உருபு தொக்கியும், b வாக்கியங்களில் விரிந்தும் அழுத்தப் பொருளை அல்லது தொகைப் பொருளைத் தருகிறது— நினைத்ததற்கு மேல், அல்லது அவ்வளவு காலம் படித்தும் பயன் இல்லை என்பது போன்ற தொனிப்பொருளைத் தருகிறது. இரண்டிலும், ஒரு வருடம் என்ற காலப் பரப்பைப் பெறுகிறோம். இடவேற்றுமை வரும்பொழுது (c வாக்கியம்) ஒரு வருடம் முடியும்பொழுது தமிழைப் படித்துவிட்டான் என்ற கால எல்லையைத் தருகிறது. இவ்வாறே 140-ஆவது வாக்கியங்களிலும் பொருத்திக் காண்க.

2. வழி –கருவி (Means and Instrumental)

உயிரிலாப் பெயரோடு இடவேற்றுமை உருபு இல் வந்து, கருவிப் பொருளைத் தரும்.

141. அவன் பஸ்ஸில் வந்தான்.

142 கோதுமையில் அல்வா பண்ணுகிறார்கள்.

143 அவள் கத்தியில் காய்கறி வெட்டுகிறாள்.

இவ்வாக்கியங்கள் ஆல் வேற்றுமை உருபு பெற்றும் வரலாம். பொருளில் இரண்டிற்கும் வேற்றுமை இல்லை.

3. நிகழ் முறை (Mode)

இடவேற்றுமை உருபேற்ற பெயர், ஒரு வினை நிகழும் முறையினை, எதன் மூலம் என்பதை விளக்கலாம்.

144. அவன் தமிழில் பேசினான்.

145. அவன் அந்தக் கதையைப் பாட்டில் பாடினான்.

4. *இனத்தில் குழுவில் பிரித்துக் காட்டல்*

இடவேற்றுமை, ஒரு குழுவில் அல்லது இனத்தில் ஒன்றையோ பலவற்றையோ பிரித்துக் காட்டும்.

146. என் மாணவர்களில் நிறைய பேர் அமெரிக்கர்கள்.

147. அந்தப் பையன்களில் யார் உன் தம்பி?

148. சிங்கங்களில் ஆறு வகை இருக்கிறது.

149 மண்ணில் ஐநூறு வகைகள் இருக்கின்றன.

150. கட்டிடங்களில் இது ஒரு வகை

மேலே உள்ள வாக்கியங்களில் இடவேற்றுமை, ஒரு பெயருக்கும் மற்றொரு பெயருக்கும் உள்ள தொடர்பைச் சுட்டி வருவதைக் காணலாம்.

இங்கு வேற்றுமை வினையோடுள்ள தொடர்பைச் சுட்டவில்லை. இவ்வுருபேற்கும் பெயர், ஒரு குழுவின் பெயராக இருப்பதால், பெரும் பாலும் பன்மையாகவே இருக்கும். பன்மைப் பெயர்களே இவ்வுருபு ஏற்கின்றன. கூட்டுப்பெயர்களாயின் ஒருமையோடும் வரும்.

151. கணவன் மனைவியில் யார் உயரம்?

இங்கு மனைவியும், கணவனும் ஒவ்வொருவரே இருக்க முடியும். இத்தகைய கூட்டுப் பெயர்களில் பலராகவும் இருக்க முடியும் என்றால் பன்மைப் பெயருடனேயே வரும்.

152. அண்ணன் தம்பிகளில் ஒருவர் வரலாம்.

## 5. *தற்காலிக உடைமை* (Temporary Possession)

இடவேற்றுமை உருபு உயிருடைப் பெயரோடு வரும்பொழுது உடைமையைச் சுட்டும். உடைமைப் பொருளைத் தருகின்ற கு வேற்றுமைக்கும், இதற்கும் இடையே உள்ள வேற்றுமையை முன்பே கு வேற்றுமையில் கண்டோம். (44, 45, 46).

153. அப்பாவிடம் பணம் இல்லை.

## 6 *புடைபெயர்ச்சியின் நோக்கம்*

இதுவும் முன்பே கு வேற்றுமையில் விளக்கப்பட்டது (25, 26).

## 7. *உணர்ச்சியைப் பெறும பொருள்*

இடவேற்றுமையில் வரும் உயிருடைப்பெயர் உணர்ச்சி சென்றடைகின்ற பெயரைச் சுட்டும்.

154. அவனுக்கு என்னிடம் மிகுந்த கோபம்.

155. நான் ராஜாவிடம் வருத்தப்பட்டேன்.

## 8. *மூலம்* (Source)

ஒரு பொருள் எங்கிருந்து கிடைத்தது என்ற மூலப்பொருளில் இடவேற்றுமை வரும். அப்பெயர் உயிருடைப் பெயராக இருக்கும்.

156. இந்தச் செய்தியை என் நண்பனிடம் கேட்டேன்.



## 7. இலிருந்து வேற்றுமை

தமிழ் இலக்கண நூலார் இதனை ஐந்தாம் வேற்றுமை என்பர்.

இருந்து, இலிருந்து, இனின்று, இடமிருந்து, ஏயிருந்து இவை இவ்வேற்றுமைக்கு உருபுகளாக வருகின்றன. பேச்சுத் தமிழில் இடமிருந்து என்பதற்குப்பதில் **கிட்டெருந்து**, **டெருந்நு** என்பன வருகின்றன.

இவ்வேற்றுமை நீங்கல், நீக்கல், எல்லை, தெரிதல், ஆகிய பொருள்களில் வருகிறது. இடம், பொருள், காலம் இவற்றிலிருந்து. நீங்கும் எல்லைப் பொருளும், ஒரு குழு, கூட்டத்திலிருந்து தெரிந்தெடுத்தல் பொருளும், ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்து வைக்கும் பொருளும் இவ்வேற்றுமைக்குரியன.

157. அவன் மதுரையிலிருந்து வருகிறான்.
158 மங்களாவிடமிருந்து நேற்று ஒரு கடிதம் வந்தது.
159 மாலை ஆறு மணியிலிருந்து தூங்கிக்கொண்டே இருக்கிறான்.

160. அம்மந்தையிலிருந்து நான்கு ஆடுகளைக் கொண்டுவா
161. புலியினிடமிருந்து ஆட்டைக் காப்பாற்றினான்.

அங்கு, இங்கு, எங்கு என்ற இடப்பெயர்களோடு (?) இருந்து, அல்லது ஏயிருந்து என்ற உருபு வரும்.

அங்கு ——→ அங்கிருந்து/அங்கேயிருந்து
இங்கு ——→ இங்கிருந்து/இங்கேயிருந்து
எங்கு ——→ எங்கிருந்து/எங்கேயிருந்து

இவை பெயர்களா? மற்ற வேற்றுமை உருபுகளை ஏற்குமா? ஈழத்தமிழில் அங்கைக்கு, அங்கால என்று பிற வேற்றுமை உருபுகளையும் இவை ஏற்கும்.

காலப்பெயர்களோடு — நேற்று, ஒரு நாளின் பல்வேறு காலப் பகுதிகள், இப்பெயர்களோடு **பிடித்து** என்பது வந்து, நீங்கல், எல்லைப் பொருளைத் தருதலும் உண்டு. பெரும்பாலும் இது பேச்சுத் தமிழில் வரும்.

162. நேற்று பிடித்து அழுதுகொண்டே இருக்கிறான்.

163. மத்தியானம் பிடித்து மழை பெய்கிறது.

காலை என்பதோடு பிடித்து என்பது வந்து இப்பொருளைத் தருகிறது.

164. காலையில் பிடித்து மழை பெய்துகொண்டே இருக்கிறது.

காலப்பெயர், எண்ணுப்பெயர் இவைகளோடு இலிருந்து என்பதற்குப் பதில், **முதல்** என்பது வந்தும் இப்பொருளைத் தருகிறது.

165.1 நேற்றுமுதல் மழை பெய்துகொண்டே இருக்கிறது.

165.2 நேற்றையிலிருந்து மழை பெய்துகொண்டே இருக்கிறது.

166.1 நேற்றுமுதல் இந்தப் படம் ஓடுகிறது.

166.2 நேற்றையிலிருந்து இந்தப் படம் ஓடுகிறது.

167.1 ஒன்றுமுதல் பத்துவரை எண்ணு.

167.2 ஒன்றிலிருந்து பத்துவரை எண்ணு.

ஐ வேற்றுமை உருபேற்ற பெயர், **விட்டு** துறத்து என்னும் உருபுகளைப் பெற்று நீங்கலெல்லைப் பொருளைத் தரும்.

168. அவன் **வீட்டைவிட்டு** ஓடிவிட்டான்.

169. அவன் வீட்டைத் துறந்து சன்னியாசி ஆனான்.

இனின்று என்பது அருகிய வழக்கு. சிலர் உயர்ந்த நடை எனக்கருதி இதனைப் பயன்படுத்துகின்றனர். இலிருந்து என்பதே பெரும்பான்மை வழக்கு.

இடமிருந்து என்பது, இனிடமிருந்து என்றும் வரும்.

இலிருந்து, இடமிருந்து என்னும் இவ்விரண்டு உருபுகளும் வரும் இடங்கள் தெளிவாக வரையறுக்கப்படாமல் இருந்தன. பொதுமாக, இடமிருந்து என்பது மக்கட் பெயரோடும், இலிருந்து என்பது

பிறபெயர்களோடும் வரும் என்கின்றனர். இக்கூற்றின் பொருந்-தாமையை விளக்கிய பிறகு, இவை வரும் இடங்களைக் கு.பரமசிவம் (ப.156 160) வரையறுத்துக் கூறுகிறார்.

இடமிருந்து, உயிரிலாப் பெயரோடு வருவதில்லை. உயிரு-டைப்பெயர், உயிரிலாப் பெயர் இரண்டுடனும் இலிருந்து வரும்.

பரமசிவம் கூறும் உயிரிலாப் பொருள், உயிருடைய பொருள் என்னும் தொடர்களைத் தானாகத் திரியும் (இயங்கும்) ஆற்றலிலாப் பொருள், திரியும் ஆற்றலுடைய பொருள், சுருக்கமாகத் திரியும் பொருள், திரியாப்பொருள் என்று மாற்றிக் கூறினால் பெரிதும் பொருந்தும். மரம், பரமசிவத்தின் கருத்துப்படி, உயிரிலாப்பொருள் ஆதல் வேண்டும். அதற்கு உயிருண்டே. ஆனால் அது திரியாப்-பொருள். (இயக்கம் என்ற தொடரைத் தவிர்க்கிறேன். அது motion என்பதற்குப் பயன்படுகிறது.)

170.1 மரத்திலிருந்து கீழே விழுந்தான். இது
170.2* மரத்தினிடமிருந்து கீழே விழுந்தான்.
என வாராது.

171. அரசனிலிருந்து ஆண்டிவரை எவருக்கும் துன்பந்தான்.

172. அரசனிடமிருந்து பரிசு பெற்றுத் திரும்பினான் புலவன்.

173. பாம்பினிடமிருந்து நாகமணி கிடைக்கும்.

174. பாம்பிலிருந்து நாகமணி கிடைக்கும்.

175. பாம்பினிடமிருந்து என்னைக் காப்பாற்றினான்.

எனவே திரியாப் பொருளோடு—பரமசிவத்தின் உயிரிலாப் பெயரோடு, இலிருந்து மட்டுமே வரும் என்பது முதல் வரையறை.

திரியும் பொருளோடு—பரமசிவத்தின் உயிருடைப் பொரு-ளொடு, இலிருந்து, இடமிருந்து இரண்டும் வரும். இவற்றில் இலிருந்து எப்பொழுது வரும், இடமிருந்து எப்பொழுது வரும்?

இயக்கமற்ற நீங்குதலைக் குறிக்கும்பொழுது இலிருந்து என்ற உருபு வருகிறது. திரியாப்பொருள்கள் இயக்கமற்றவை. எனவே அவற்றோடு இலிருந்து வருகிறது. உயிரிலாப் பொருள்—திரியாப்-பொருள்கள் இயக்கமுடையனவாகக் கருதப்படும்பொழுது இடமிருந்து வருகிறது.

176. இந்தப் பாதை பாண்டியிலிருந்து சென்னை செல்கிறது.

177. அன்றையிலிருந்து இன்றுவரை என்னிடம் பேச-மாட்டான்.

178. ரஷ்யாவிடமிருந்து இந்தியா போர்க்கருவிகள் பெறு-கிறது.

178-இல், ரஷ்யா நாட்டைக் குறிக்காமல் (இயக்கமில்லாப்-பொருள்) அம்மக்களைக் குறிப்பதால் (இயக்கமுடையபொருள்) இடமிருந்து என்ற உருபு வருகிறது.

179. அந்த நாயிடமிருந்து உறுமல் வருகிறது.

180. அந்த நாயிடமிருந்து நாற்றம் வருகிறது.

உயிருடைய பொருள்கள்—திரியும் பொருள்கள், இயக்க-மற்றவைகளாகக் கருதப்படும்பொழுது இலிருந்து வருகிறது

181. அந்தப் பசுவிலிருந்து பாலைக் கறந்தான்.

181-வது வாக்கியம் இயக்கமற்றது என்பதை, இவ்வாக்கியம் இல்வேற்றுமையிலும் வருவதால் உணரலாம். பால்மடி இயக்க மற்றது.

182 அந்தப் பசுவில் பாலைக் கறந்தான்.

உயர்திணைப் பெயர்களோடு இயக்கமற்ற தொடக்கத்தைக் குறிக்க இலிருந்து வருகிறது.

183. அந்த வீட்டில் அப்பாவிலிருந்து பாப்பா வரை எவரும் காப்பி சாப்பிட மாட்டார்.

இயக்கமற்ற தொடக்கம், from among, out of போன்ற பொருள்களிலும் இலிருந்து வரும்.

184. அப்பெண்களிலிருந்து ஒருத்தியைப் பாடக் கூப்பிட்டான்.

184-இல் இயக்கமின்மையை

185. அப்பெண்களில் ஒருத்தியைப் பாடக் கூப்பிட்டான்.

என்று இவ்வாக்கியம், இல்வேற்றுமையில் வருவதாலும் உணரலாம்.

எனவே இயக்கக்குறிப்பு இல்லாதபொழுது உயர்திணை உயிருடைப் பெயரோடு இலிருந்து என்பதும், மற்ற பொருள்களில் இடமிருந்து என்பதும் வருகின்றன எனலாம். இது கு. பரமசிவம் தரும் விளக்கம்.

இலிருந்து, இடமிருந்து இவற்றின் வருகையைக் கீழே கண்டவாறும் விளக்கலாம்.

காலம், இடம் ஆகிய இருவகை எல்லைப் பொருளிலும் இலிருந்து என்பதே வரும். இலிருந்து நீங்கல் / நீக்கல் எல்லை-யையும், கு வேற்றுமை அடைதல் எல்லையையும் குறிக்கும்,

186. சென்னையிலிருந்து ஆறு மணிக்கே அமைச்சர் புறப்பட்டு விட்டார்

187. ஆறு மணியிலிருந்து விடியும்வரை தூங்கவே இல்லை.

188. பாண்டியன் அந்தப்புரத்திலிருந்து அரண்மனைக்குப் போனான்.

உயர்திணைப் பெயர்களும், அஃறிணை திரியும் பெயர்களும், அப்பொருளின் வேறாய பொருள் ஒன்று அதிலிருந்து பிரியும் பொழுது இடமிருந்து என்ற உருபு ஏற்றும், அப்பொருளே அப்பொருள்-களாலாகிய குழுவிலிருந்து பிரியும்பொழுது இலிருந்து என்ற உரு-பேற்றும் வரும்.

189 1 எங்கள் மாணவர்களிலிருந்து ஒருவனை அனுப்புகிறேன்.

189 2 எங்கள் மாணவர்களிடமிருந்து எதுவும் கிடைக்காது.

189.1—இல், மாணவனே மாணவர்களால் ஆய குழுவிலிருந்து விலகுகிறான். அதனால் இலிருந்து வருகிறது. 189.2 - இல் மாணவர்களைத் தவிர்த்து, அவர்களிடம் உள்ள பிறபொருள்கள் சுட்டப்படுவதால் இடமிருந்து வருகிறது. மேலும் சில எடுத்துக் காட்டுகளைக் காண்க.

190. 1 கண்ணன் அந்தப் பெண்களிலிருந்து ஒருத்தியை ஆடக் கூப்பிட்டான்.

190. 2 கண்ணன் அந்தப் பெண்களிடமிருந்து தங்கச் சங்கிலி-களைக் கேட்டான்.

191. பெருமாள், யானையை முதலையினிடமிருந்து காப் பாற்றினார்.

192 இந்தக்காலத்தில் நாயினிடமிருந்துகூட நன்றியை எதிர்பார்க்க முடியாது.

அஃறிணை திரியும் பொருள்களால் அவற்றிடமுள்ளபொருளைத் தாமாகக் கொடுக்க முடியாது அதுவாக நீங்காது. அது நீக்கப் படுகிறது. அப்பொழுது இலிருந்து, இடமிருந்து, இல் மூன்றும் வரலாம். ஆனால் பிரியும் பொருள் அவற்றின் வேறானதாயின் இடமிருந்து மட்டுமே வரும்.

193.1 பசுவிலிருந்து பால் கறக்கிறான். (பால் பசுவினுள் அடங்கியது)

193.2 பசுவினிடமிருந்து பால் கறக்கிறான்.

193.3 பசுவில் பால் கறக்கிறான்.

193.4 பசுவினிடமிருந்து கன்றுக்குட்டியை விரட்டு. (வேறாய பொருள்)

194.1 பாம்பிலிருந்து நாகமணி கிடைக்கிறது. (உள் அடங்கிய பொருள்)

194.2 பாம்பினிடமிருந்து நாகமணி கிடைக்கிறது.

194.3 பாம்பில் நாகமணி கிடைக்கிறது.

194.4 பாம்பினிடமிருந்து என்னைக் காப்பாற்றினான். (வேறாய பொருள்)

## *இவ்வேற்றுமைப் பொருள்கள்*

### 1. தெரிதல் பொருள்

ஒரு குவியல், கூட்டம், குழு இவற்றிலிருந்து தெரிந்து எடுக்கும் பொருளை இவ்வேற்றுமை தருகிறது.

195. அக்குவியலிலிருந்து ஒரு கூடைச் செங்கலைக் கொண்டு வா.

196. பத்தாவது வகுப்புப் பையன்களிலிருந்து நன்றாகப் படிப்பவர் நால்வரை அனுப்பு.

### 2. நீங்கல் எல்லை

இடம், காலம், பொருள் இவற்றை எல்லையாகத் தொடங்கி நீங்கும் பொருளைத் தரும்.

197. சென்னையிலிருந்து அமைச்சர் வருகிறார்.

198. காலையிலிருந்து சாயங்காலம்வரை படித்துக்கொண்டே இருக்கிறான்.

199. மாமாவிடமிருந்து கடிதம் எதுவும் வரவில்லை.

200. மரத்திலிருந்து கிளை ஒன்று ஒடிந்து விழுந்தது.

காலப்பெயரோடு பிடித்து, இல்பிடித்து, முதல் என்பன வந்து நீங்கல் பொருள் தருவதையும், ஐ வேற்றுமை உருபேற்ற பெயர், விட்டு என்பதைப் பெற்று இப்பொருள் தருவதையும் முன்பே கண்டோம். (162—169)

### 3. நீக்கல்

ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்துக் காத்தல் போன்ற பொருளில் வரும்.

201. பாம்பினிடமிருந்து என்னைக் காப்பாற்றினான்.

202. அவர்களிடமிருந்து ரகசியத்தைக் காப்பாற்று.



## 8. அது வேற்றுமை

தமிழ் இலக்கண நூலார் இதனை ஆறாம் வேற்றுமை என்பர். பரமசிவம் (ப 1‹4-168) கிழமை வேற்றுமை என்பார்.

இவ்வேற்றுமையின் உருபுகள் உடைய, அது என்பன. உடைய என்பது உடை என்பதன் பெயரெச்ச வடிவம். அது வேற்றுமை உருபாக மாறியது. எனவே உடைய உருபேற்ற பெயர்த்தொடர், பெயரெச்ச வாசகமே எனலாம். அப்பாவினுடைய வீடு என்பது, அப்பாவினுடைய என்ற பெயரெச்ச வாசகமும், வீடு என்ற பெயரும் இணைந்த வாக்கியம். அது என்பதைவிட, உடைய என்பதே மிகுதி-யாகப் பயன்படுகிறது.

பரமசிவம், ''எழுத்துத் தமிழில் - இன் என்பதும் வரலாம். இன் சாரியை என்பாரும் வேற்றுமை உருபு என்பாரும் உண்டு'' என்கின்றார் (ப.164).

இன், வேற்றுமை பெயராக்க உருபு (காண்க. ப. 3; விதி 5). அது வேற்றுமை உருபன்று. அது வரும் இடங்களைக் காண்க.

நான் ⟶ என் ⟶ என்கை/எனது கை/என்னுடைய கை

மரம் ⟶ மரத்து ⟶ மரத்துக்கிளை/மரத்தின் கிளை/மரத்தினது கிளை

ஆறு ⟶ ஆற்று ⟶ ஆற்றுமணல்/ஆற்றின் மணல்/ஆற்றி-னது மணல்

பாலின் விலை/பாலினது விலை/பாலினுடைய விலை

அப்பாவின் வீடு/அப்பாவினது வீடு/அப்பாவினுடைய வீடு

இன் என்பது இவ்வேற்றுமைக்குரிய உருபென்றால், இனது, இனுடைய என்பதில் உருபின் மேல் உருபு வந்ததாக வேண்டும்.

இரண்டு உருபுகளும் ஒரே பொருளுடையன, அல்லது இனது, இனு-டைய இரண்டும் தனித்தனி வேற்றுமை உருபுகள் எனல் வேண்டும். இன் என்பதன்மேல் பிற வேற்றுமை உருபுகளும் வரலாம்-பசுவி-னால், பசுவிற்கு, பசுவினை. இக்காரணங்களால் இன் என்பதை வேற்றுமை உருபேற்கும் பெயராக்க உருபு எனக்கொள்வதே பொ-ருந்தும். மரத்து விலை என்னும்பொழுது, வேற்றுமை உருபேற்கும் வடிவே உடைமைப் பொருளைத் தருவதுபோல, மரத்தின் விலை, வீட்டின் விலை, பசுவின் விலை என்னும்பொழுதும் வேற்றுமை உருபேற்ற பெயர் வடிவே (இன் உருபேற்ற பெயர் வடிவு) உடை-மைப் பொருளில் வருகிறது எனலாம்.

இவ்வேற்றுமை (1) உடைமை; (2) ஒரு நிலை, நிகழ்ச்சியை ஏற்கும் எழுவாய்; (3) முதலுக்கும் சினைக்கும் இடையே உள்ள தொடர்பு ஆகிய இப்பொருள்களில் வரலாம்.

### உடைமைப்பொருள்

இவ்வேற்றுமை உருபேற்ற பெயர், பெயரடை வாசகமாக நின்று, அதனை அடுத்து வரும் பொருளை உடைமையாக்கிக் கொள்-ளும்.

203. அம்மாவினுடைய புடவை.

204. அவனுடைய வீடு.

மயக்கந்தரும் இடங்களில் இவ்வேற்றுமை உருபு விரிந்தே நிற்கும்.

205. அம்மா தங்கை வந்தார்கள்.

இங்கு அம்மா தங்கை என்பதை, அம்மாவும் தங்கையும் என்பதா, அம்மாவினுடைய தங்கை என்பதா? வந்தார்கள் என்பதை உயர்வொருமையாகவும் கொள்ளலாம். இத்தகைய இடங்களில் உடைமைப் பொருளாயின் உருபு விரிந்தே வருதல் வேண்டும்.

உடைமையைத் தன்னிடமிருந்து பிரிக்கமுடியாத உடைமை (தற்கிழமை-inalienable), தன்னிடமிருந்து பிரிக்கக்கூடிய உடைமை

(பிறிதின் கிழமை - alienable) என இரண்டாகப் பிரிப்பர் நமது இலக்கண நூலார். தற்கிழமை குணம், தொழில், உறுப்பு மூன்றிலும் வரும் என்பர்.

206 முருகனுடைய அழகு. (குணம்)
207. வள்ளியின் நடனம். (தொழில்)
208. யானையின் துதிக்கை. (உறுப்பு)
} தற்கிழமை

209. பார்வதியின் செருப்பு. பிறிதின்கிழமை

**ஒரு நிகழ்ச்சியை, தொழிலை ஏற்கும் எழுவாயாக வருதல்**

210. வள்ளியினுடைய நடிப்பு. (தொழில்)

211. என்னுடைய சாவு (நிகழ்ச்சி).

இவற்றில் நடிப்பினை ஏற்கும் எழுவாய் வள்ளி. சாவினை ஏற்கும் எழுவாய் நான்.

212. முருகனுடைய பள்ளிக்கூடம்.

இதில் முருகன் பள்ளிக்கூடத்திற்கு உரியவனாயின் முருகன் உடைமையை ஏற்கும் பொருள். முருகன் படிக்கும் பள்ளிக்கூடமாயின் முருகன் எழுவாய்.

**முதலுக்கும் உறுப்புக்கும் உள்ள தொடர்பு**

வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவம், எத்தகைய உருபும் ஏற்காமல் பெயரடையாகச் செயற்படும்பொழுது உடைய வேற்றுமைப் பெயர், பெயரடை நோடில் (node) முடியும்.




இவை முதற்பொருளுக்கும் சினைப்பொருளுக்கும் இடையே உள்ள தொடர்பினை விளக்கும்.

213. வீட்டுத்திண்ணை

214. கை விரல்

215. ஆற்றுத் தண்ணீர்

பரமசிவம் கூறுவது (ப. 166) "கிழமை உருபிற்கும் அதன் பின்னே வருகிற பெயருக்குமிடையில் பெயரெச்சத் தொடர் வர முடியாது.

13. (அ) † கௌதமருடைய சிலையாகிப்போன மனைவி.

(ஆ) † பார்வதியினுடைய இராக்கூத்தடிக்கிற கணவன்.

ஆனால் அவற்றுக்கிடையே சில பெயரடைகள் வரலாம்.

14. (அ) குந்தியினுடைய மூத்த பிள்ளை.

(ஆ) சேரனுடைய நெருங்கிய நண்பன்.

(இ) அர்ச்சுனனுடைய இரண்டாவது மனைவி.

பரமசிவம் காட்டுகின்ற மேலே உள்ள எடுத்துக்காட்டுகளில் 14 (ஆ)-இல் வருகின்ற நெருங்கிய என்பது பெயரெச்சத் தொடர் தானே. இந்த இடத்தில் பெயரெச்சத் தொடர் வரமுடியாது என்பது பொருந்தவில்லை 13 (அ) (ஆ) வாக்கியங்களும் பொருத்தமுடையனவாகவே தோன்றுகின்றன. எனவே இவ்விடங்களில் பெயரெச்ச வாசகம் வருவது போலவும், வராதது போலவும் தோன்றுகிறது. அதற்குக் காரணம் என்ன? உடைய என்பது பெயரெச்சம். எனவே உடைய உருபேற்ற பெயர், பெயரெச்சத் தொடரே. ஆனால் அதனைப் பெயரெச்சம் என்பதை மறந்து வேற்றுமை உருபாகவே கருதுகிறோம். ஒரு வாக்கியத்தில் ஒன்றற்கு மேற்பட்ட பெயரெச்சத்தொடர் வராது. வேற்றுமை உருபை அடுத்துப் பெயரெச்சத் தொடர் வருவது இயல்பே. உடைய என்ற பெயரெச்சம் வேற்றுமை உருபாக மாறியபொழுது, மற்றொரு பெயரெச்சம் இங்கு வந்து, உடைய பெயரெச்சமாகையால், மற்றொரு பெயரெச்சம் வரலாமா என்ற ஐயத்தை எழுப்பி ஊசலாடும் நிலையில் இது செயற்படுகிறது.



## 9. விளிவேற்றுமை

இதனைத் தமிழ் இலக்கண நூலார், எட்டாம் வேற்றுமை என்பர்.

மற்றையோரைத் தன்பால் அழைக்கும் பொருளைத் தரும்

இவ்வேற்றுமைக்குத் தனி உருபு எதுவும் இல்லை. பெயர்ச் சொற்களில் ஏற்படும் மாறுதல்களே விளிப்பொருளைத் தருகிறது. மற்ற வேற்றுமைகள், அவ்வேற்றுமைக்கும் வினைக்கும் அல்லது பெயருக்கும் உள்ள தொடர்பினை விளக்கி வாக்கியத்தில் ஒரு கூறாக வரும். இவ்வேற்றுமைப் பெயர் தனியாக, தனி வாக்கியமாகப் பிரிந்து நிற்கும். இது, அதனோடு தொடர்புடையதாகி அதனை அடுத்து வரும் வாக்கியத்தின் முன் நின்று செயற்படும்.

216. அண்ணே! அங்குப் போகவேண்டாம்.

முன்னிலையிலோ, படர்க்கையிலோ இருப்பவரைத் தன்பால் அழைக்கிறோம். தன்மை முன்னிலைப் பெயர்கள் விளி ஏலா. படர்க்கைப் பெயர்களே விளி ஏற்கும்.

அண்மையில் இருப்பவரை அழைப்பது அண்மை விளி எனவும், சேய்மையில் இருப்பவரை அழைப்பது சேய்மை விளி எனவும் நம் இலக்கண நூலார் கூறுவர். பரமசிவம் (ப. 177) இதனைமேலும் மதிப்புடை விளி, மதிப்பிலா விளி என ஒவ்வொன்றையும் இரண்டாகப் பிரிப்பார். நெருங்கிய நண்பர், இளையவர் இவர்களை விளிப்பது மதிப்பிலா விளி. மற்றவர்களை விளிப்பது மதிப்புடை விளி. மதிப்புடை விளியில் பெயர்கள் மாறுவதில்லை–இராஜேந்திரன். மதிப்பிலா விளிகளில் பெயர்கள் வடிவம் மாறும்–இராஜேந்திரா.

இல்வேற்றுமையில் பெயர்கள் அடையும் மாற்றங்களைக் காண்போம்.

சேய்மை விளிப்பெயர்கள் எல்லாம், அப்பெயர்களின் முன்பு ஏ.... என்ற உருபினைப் பெற்றே வரும். இதனையும் விளி வேற்றுமையின் கூறாகவே கொள்ளுதல் வேண்டும்.

1. ஈற்று னகரம் கெட்டு அதன் முன் நின்ற அகரம் நீளுதல்.

அண்ணன் ——→ அண்ணாஆ... ஏ... அண்ணாஆ....
கண்ணன் ——→ கண்ணாஆ ... ஏ... கண்ணாஆ ...

2. இறுதி னகரம் கெட்டு, முன்னின்ற அகரம் ஏகாரமாதல்.

அண்ணன் ——→ அண்ணேஏ ... ஏ.... அண்ணேஏ ...
அரசன் ——→ அரசேஏ .... ஏ... அரசேஏ ...

3. ஈற்று ளகரம், னகரம் கெட்டு (உறவுமுறைப் பெயர்களில்) முன்னின்ற அகரம் ஓகாரமாகத் திரிதல்.

அண்ணன் ——→ அண்ணோஓ.... ஏ... அண்ணோஓ...
அக்காள் ——→ அக்கோஓ .... ஏ .... அக்கோஓ...

4. ஈற்று னகரம், ளகரம் கெடாது ஏகாரம் பெறுதல்-மகன், மகள் என்ற உறவுமுறைப் பெயர்களில்.

மகன் ——→ மகனேஏ .... ஏ ... மகனேஏ ....
மகள் ——→ மகளேஏ .... ஏ ... மகளேஏ ...

5. அப்பா, அம்மா என்ற உறவுமுறைப் பெயர்களில் ஈற்று ஆகாரம் ஓகாரமாக மாறுதல்.

அப்பா ——→ அப்போஓ ... ஏ .... அப்போஓ ....
அம்மா ——→ அம்மோஓ ... ஏ .... அம்மோஓ ....

6. ஈற்று ஆகாரம் நீண்டு ஒலித்தல்.

அம்மா ——→ அம்மாஆ .... ஏ ... அம்மாஆ ....
அப்பா ——→ அப்பா ஆ .... ஏ .... அப்பா ஆ ....
மங்களா ——→ மங்களாஆ.... ஏ ... மங்களாஆ ...



## 10. சொல்லுருபுகள்

ஆங்கிலத்தில் Post positions என்று கூறுவனவற்றையே நாம் சொல்லுருபுகள் என்கிறோம். தமிழில் சொல்லுருபுகள் வேற்றுமை உருபு போன்று செயற்படுகின்றன ஆங்கில மொழியில் இவற்றிற்கு நேரானவை prepositions. இவற்றை ஆங்கிலத்தில் பெயர், வினை, வினையடை, பெயரடை முதலிய எந்த சொல் வகைகளிலும் அடக்க முடியாது. அவைகளெல்லாம் உருபேற்றுவரும். ஆனால் Preposition எந்த உருபும் ஏற்காது. boy-boys; read-reads-reading; to, on இவற்றைக் காண்க. அதனால் ஆங்கில மொழியில், இவற்றைத் தனி ஒரு சொல் வகையாகவே கருதுகின்றனர்.

தமிழில் நாம் சொல்லுருபுகள் என்று கூறுகின்றவற்றுள் சில பெயர்கள்; சில வினைகள். பெயர்களிலும் வினைகளிலும் சில, பெயர் வினைகளாகச் செயற்படுவதோடு, குறிப்பிட்ட சில இடங்களில் சொல்லுருபுகளாகவும் செய்ற்படுகின்றன. இவ்வாறு வரும்பொழுது, இவற்றில் பெருபாலான சொற்கள் மூலப்பொருளில் இருந்து வேறுபட்ட பொருளைத் தருகின்றன. அப்பொருள், வேற்றுமைப் பொருளாகும். அதனால் இவற்றை வேற்றுமை உருபுகள் என்றும் கூறமுடியாது. வேற்றுமை உருபுகள் கட்டுருபுகள் (bound morphs), இவை கட்டிலாச் (free forms) சொற்கள். பிற இடங்களில் இவை அத்தகைய பெயர்ச் சொற்களாகவும், வினைச்சொற்களாகவும் செயற்படுகின்றன. இவை குறிப்பிட்ட பெயர் வடிவங்களோடு-குறிப்பிட்ட வேற்றுமை உருபேற்ற பெயர்கள், திரிபில் பெயர், வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவு இவைகளோடு வந்து, அவற்றோடு அண்மை நிலை வழக்கில் இயங்கி, பின்னர் அனைத்தும் சொல்லுருபுத் தொடராகச் (Post positional phrase) செயற்படுகின்றன. இவற்றில் சில அடைபெற்றுக் கூட்டுச்சொல்லுருபுகளாகச் செயற்படுகின்றன. பெயருக்கும், அவற்றோடு இணையும் சொல்லுருபுக்கும் இடையில் வேறு எதுவும் வரமுடியாது. இவ்வாறு இவை வேற்றுமை உருபு போலச் செயற்படுவதால், தமிழில் இவற்றை இரண்டாவது நிலை வேற்றுமை எனலாம்.

இச்சொல்லுருபுகளை கீழே உள்ளவாறு வகைப்படுத்தலாம்.

1 0 பெயர்ச்சொல்லுருபுகள்.

1 .1 திரிபில் பெயருடன் வருவன.

முதல்

வரை/வரைக்கும்/வரையில்

1 2 வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவுடன் வருவது.

அண்டை

1.3 திரிபில் பெயருடனும், வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவுடனும் வருவது.

வழியாக

1.4 ஐ வேற்றுமைப் பெயரொடு வருவது

மாதிரி

1. 5 கு வேற்றுமைப் பெயரொடு வருவது.

அப்புறம்/அப்புறத்தில்

இடையில்/இடையிலிருந்து

உள்/உள்ளே/உள்ளார

எதிர்/எதிரே/எதிரில்/எதிரேஇருந்து/எதிரிலிருந்து

எல்லாம்

பதில்/பதிலாக

வெளியே/நேர (நேராக) வெளியே

1.6 இன் உருபேற்ற பெயருடன் வருவன.

படி

மூலம்

1.7 கு வேற்றுமைப் பெயரோடும், இன் வேற்றுமைப் பெயரோடும் வருவன. மூவிடப் பெயர்கள் கு வேற்றுமையில் வரும்.

அப்பால்/அப்பாலிருந்து

கீழே/கீழேஇருந்து/நேர் (நேராகக்) கீழே

குறுக்கே

நடுவில்/நடுவிலிருந்து

பிறகு (பின்பு)

பின்/பின்னால்/பின்னுக்கு/பின்னாடி/நேர் (நேராகப்) பின்னால்

முன்/முன்னால்/முன்னுக்கு/முன்னாடி/ நேர் (நேராக)முன்னால்

1 8 கு வேற்றுமைப் பெயர், இன் வேற்றுமைப் பெயர், வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவு இவற்றுடன் வருவன.

கிட்ட

பக்கம்/பக்கத்தில்/பக்கத்திலிருந்து

மேல்/மேலே/நேர (நேராக) மேலே

2.0 வினைச்சொல்லுருபுகள்

2.1 திரிபில் பெயருடன் வருவது.

கட

2.2 ஐ வேற்றுமைப் பெயருடன் வருவன.

காட்டிலும் பற்றி

கொண்டு விட

தவிர

2.3 திரிபில் பெயருடனும் ஐ வேற்றுமைப் பெயருடனும் வருவன.

போல்/போல (பேன்று)

2 4 ஐ வேற்றுமைப் பெயருடனும், இல் வேற்றுமைப் பெயரு-டனும் வருவது.

வைத்து

2.5 கு வேற்றுமைப் பெயருடன் வருவன.

அடுத்தாற்போல்/நேர அடுத்தாற்போல்/மிகவும் அடுத்தாற்போல் ஆக

1.0 பெயர்ச்சொல்லுருபுகள்.

1.1 திரிபில் பெயர் வடிவோடு வரும் சொல்லுருபுகள்.

முதல்

ஆங்கிலத்தில் இதனை from என்று பொருள் படுத்தலாம்.

இது பெயராக வரும்பொழுது இல், இலிருந்து என்ற வேற்று-மை உருபுகளை ஏற்று வரும். பெயர் + பெயர் என்ற கூட்டுப்-பெயரில், இது முதல் பெயராக வரும்.

217. முதலில் வந்தான்.

218. அவன் முதலிலிருந்தே ஒழுங்காக இல்லை.

219. முதல் வேலை; முதல் அமைச்சர்.

சொல்லுருபாகத் திரிபில் பெயரோடு வரும்.

220. அதுமுதல் நான் அவனிடம் பேசமாட்டேன்.

221. தோட்டம் முதல் தொழுக்கயிறு வரை எல்லாம் எடுத்துக் கொண்டான்

வரை/வரைக்கும்/வரையில்

வரை என்பது எல்லையைக் குறிக்கும். ஆங்கிலத்தில் up to, until என்று மொழிபெயர்க்கலாம்.

வரை என்பது பெயராக வரும்பொழுது கூட்டுப் பெயர்த் தொடரில் தலையாக வரும். வீட்டின் கடைசி வரை, கடற்கரை வரை என்ற தொடர்களைக் காண்க. பெயராக எல்லா வேற்றுமை உருபுகளையும் ஏற்றுவரும்.

சொல்லுருபாக வரும்பொழுது கு வேற்றுமை உருபும், உம் உருபும் முறையே பெற்று வரைக்கும் எனவும், இல் வேற்றுமை உரு- பேற்று வரையில் எனவும் வரும். இது திரிபில் பெயர் வடிவுடன் வரும்.

222. இந்தப் பாதை வீடு வரை (வரைக்கும்) (வரையில்) போகிறது.

223. அவன் எட்டாம் வகுப்பு வரை (வரைக்கும்) (வரையில்) படித்திருக்கிறான்.

224 ஆறு வரைக்கும் நடப்போம். அப்புறம் படகில் போ- வோம்.

225 ஆற்றின் நடுப்பக்கம் வரை நடப்போம்.
ஆறு, வீடு என்பன திரியில் பெயர் வடிவில் இருத்தல் காண்க.

திரிபில் பெயர் வடிவுடன் வரும் இச்சொற்களை வேற்றுமை உருபாகக் கொள்ளாமைக்கு இரண்டு காரணங்கள் (1) இவ்வுருபுகள் தனிச்சொற்கள். (2) பெயர்ச் சொற்கள் இவற்றின் முன் வரும்- பொழுதும் வேற்றுமை உருபேற்கும் வடிவுடையனவாக மாறுவ- தில்லை. சொல்லுருபுகளின் முன்பு, எப்பொழுதும் வேற்றுமைப் பெயர் வடிவாக மாறும் இயல்புடைய தன்மை முன்னிலைப் பெயர் கள் கூட, மாறியும் மாறாமலும் வருகின்றன. நான் வரைக்கும் என் வரைக்கும்; நீ வரைக்கும்—உன் வரைக்கும்.

1.2 வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவுடன் வருவது.

அண்டை

ஆங்கிலத்தில் near என்பதற்கு நேரான பொருளில் வருகிறது.

பேச்சுத்தமிழில் ஆண்டே என வரும். இது பேச்சுத் தமிழிலேயே பெரும்பாலும் வருகிறது.

அண்டு என்ற வினையிலிருந்து வந்த பெயர்.

பெயராக வரும்பொழுது இல் வேற்றுமை உருபேற்று வரும். பெயர்+பெயர் என்ற கூட்டுத்தொடரில், முதல் பெயராக வரும்.

226. அண்டை வீடு

227. அண்டையில் போ.

சொல்லுருபாக வரும்பொழுது வேற்றுமை உருபு எதுவும் ஏற்காது. வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவை அடுத்துவரும்.

228. தோட்டத்தண்டை ஒரு குளம் இருக்கிறது.

229. கோயிலண்டை பூந்தோட்டம் இருக்கிறது.

எழுதும் தமிழில் இப்பொருளில்—அண்மை என்ற பொருளில், **பக்கம்** என்பதே பெரு வழக்கு.

230. தோட்டம் (தோட்டத்திற்குப்) (தோட்டத்தின்) பக்கம் (பக்கத்தில்) வயல் இருக்கிறது,

1.3 திரிபில் பெயருடனும், வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவுடனும் வருவது.

வழியாக

ஆங்கிலத்தில் through என்பதற்கு நேரான பொருளது.

வழி என்ற பெயர் வினையடை உருபாகிய ஆக என்பதனைப் பெற்று வழியாக என்று வந்தது. பெயராக வரும்பொழுது எல்லா வேற்றுமை உருபுகளையும் ஏற்று வரும். வழியை, வழியால், வழிக்கு.

சொல்லுருபாக வரும்பொழுது திரிபில் பெயர் வடிவுடனும் வரும்.

231. அவன் தோட்டம் (தோட்டத்து) வழியாக நுழைந்து வருகிறான்.

232. அவள் ஜன்னல் வழியாகக் கீழே விழுந்தாள்.

233. என்வழியாகப் பணத்தைக் கொடு.

1.4 திரிபில் பெயருயடனும், ஐ வேற்றுமைப் பெயருடனும் வருவது

மாதிரி

மாதிரி, போல என்ற பொருளைத் தரும் பெயர். மாதிரி ஒன்றைக் காட்டினான். மாதிரிக்கு இதனை எடுத்துக் கொண்டுபோ என்னும்பொழுது மாதிரி பெயராக வருவதைக் காண்க. இங்கெல்லாம் example என்ற பொருளில் வருகிறது.

இப்பெயர் சொல்லுருபாக வரும்பொழுது உயர்திணைப் பெயர்களாயின் ஐ வேற்றுமைப் பெயரை அடுத்தும், அஃறிணைப் பெயராயின் திரிபில் பெயரோடும் வரும்.

234. என்னை மாதிரி எவரும் சண்டை போட முடியாது.

235. ஆறுமுகத்தை மாதிரி எவரும் பேச முடியாது.

236. அவள் மாடு மாதிரி உழைக்கிறாள்.

237. குடம் மாதிரி உருளுகிறாள்.

ஐ வேற்றுமைப் பெயரை அடுத்துப் போல் வரும் இடங்களில் இதுவும் வரும்.

1.5 கு வேற்றுமைப் பெயரோடு வரும் சொல்லுருபுகள்.

இப்பகுதியில் பதில், எல்லாம் என்ற இரண்டு சொல்லுருபுகளையும் தவிர மற்றவைகள் எல்லாம் இல் வேற்றுமை உருபேற்று வருகின்றன. இல் வேற்றுமை உருபேற்ற சொல்லுருபுகள் இலிருந்து வேற்றுமை உருபும் ஏற்கும். பதில், எல்லாம் இரண்டையும் தவிர மற்ற சொல்லுருபுகள் எல்லாம் இடப்பொருளில் வருகின்றன.

அப்புறம்/அப்புறத்தில்

இதனை ஆங்கிலத்தில் on the other side என்று மொழி பெயர்க்க வேண்டும். பக்கம் என்று பொருள் தரும் புறம் என்னும் பெயர், சேய்மைச் சுட்டை முன்னொட்டாகக் கொண்டு அப்புறம் என்றாயிற்று. புறம் என்பது வேறு இடங்களிலும் வரும். அந்தப் புறம், பின்புறம், முன்புறம் என்ற இடங்களில் எல்லாம் இது பெயராக வருவதைக் காணலாம்.

சொல்லுருபாக வரும்பொழுது, இது இல் வேற்றுமை உருபு ஏற்றும் ஏற்காமலும் வரலாம். காலம், அல்லது இடத்தைச் சுட்டும்

பொழுதே இல் உருபு வருகிறது. இது கு வேற்றுமை உருபேற்ற பெயருடன் வருகிறது

238. ஜன்னலுக்கு அப்புறம் (அப்புறத்தில்) அவன் நிற்கி. றான்.

239. வீட்டிற்கு அப்புறம் (அப்புறத்தில்) ஒரு தோட்டம் இருக்கிறது.

240. ஒரு மாதத்திற்கு அப்புறம் இன்றுதான் வருகிறான்.

இடையில்/இடையிலிருந்து

இடை என்னும் பெயர் intervel, gap, in between என்ற பொருளில் வரும். இது பெயராக வரும்பொழுது கூட்டுப்பெயரில் முதற் பெயராக வரும். இடைவேளை, இடைத்தேர்தல் என்ற தொடர்களைக் காண்க. பெயராக வரும்பொழுது ஐ வேற்றுமை, இல் வேற்றுமை, இலிருந்து வேற்றுமை இவைகளில் வரும்.

241. இடையை ஒடித்தான். (இடைப்பட்ட உடற்பகுதியைக் குறிக்கிறது)

242. இடையில் நுழைந்தான்.

243. இடையிலிருந்து வந்தான்.

சொல்லுருபாக வரும்பொழுது இல் வேற்றுமை உருபும், இலிருந்து வேற்றுமை உருபும் ஏற்று வரும். இது கு வேற்றுமைப் பெயரோடு வரும். அப்பொருளுக்குள் என்று பொருள் தரும்.

244. புத்தகத்திற்கு இடையில் பத்து ரூபாய் இருக்கிறது.

245. புத்தகத்திற்கு இடையிலிருந்து பத்து ரூபாய் எடுத்தான்.

இடையில் என்பது நடுவில் — between என்ற பொருளிலும் வரலாம் ஒரே வகையான இரண்டு பொருள்களுக்கு நடுவில் என்னும் பொருளில் வரும்பொழுது, அப்பொருளைப் பன்மையிலும், வேறுபட்ட பொருளாயின் இரண்டும் தனித்தனியாகக் கு உருபேற்று அதன் மேல் உம் உருபு பெற்றும் வரும்.

246. புத்தகங்களுக்கு இடையில் பத்து ரூபாய் வைத்தான்.

247. புத்தகங்களுக்கு இடையிலிருந்து பத்து ரூபாய் எடுத்தான்.

248. மேசைக்கும் அலமாரிக்கும் இடையில் இருக்கிறது.

249. மேசைக்கும் அலமாரிக்கும் இடையிலிருந்து எடுத்தான்.

உள்/உள்ளே/(உள்ளார)

உள் என்னும் பெயரை in, inside, interiority என்று மொழி பெயர்க்கலாம். உள்ளே என்பதில் ஏகாரம் இல் வேற்றுமை உருபு. பெயராக வரும்பொழுது கு வேற்றுமை உருபோ, இல் வேற்றுமை உருபோ ஏற்று வரும். மற்ற வேற்றுமை உருபு எதுவும் ஏற்பதில்லை. உள்ளார என்பது பேச்சுத் தமிழில் வருகிறது. இதில், ஆர என்பதை இல் வேற்றுமை உருபாகக் கொள்ள வேண்டும்.

250, உள்ளுக்கு (உள்ளே) (உள்ளார) ஒரு மருந்து கொடுக்க வேண்டும்.

251. உள்ளார (உள்ளே) (உள்ளுக்கு) போங்கள்.

சொல்லுருபாக வரும்பொழுது இல் வேற்றுமை உருபு ஏகாரம் பெற்றும் பெறாமலும் வரலாம் இது கு வேற்றுமை உருபேற்ற பெயரோடு வரும்.

252. வீட்டிற்கு உள்ளே போகாதே.

253. ஒரு வாரத்திற்குள் வேலையை முடிக்க வேண்டும்.

எதிர்/எதிரே/எதிரில்/எதிரேஇருந்து/எதிரிலிருந்து

எதிர் என்னும் பெயர் that which is opposite என்னும் பொருளில் வரும். பெயர் + பெயர் என்ற கூட்டுப்பெயரில், முதற்பெயராக வரும். எதிர்ப்பக்கம், எதிர்வாதம், எதிர்வீடு என வருதல் காண்க. இது வினையடை உருபாகிய ஆக என்பதை ஏற்று வரும்-எதிராக.

சொல்லுருபாக வரும்பொழுது இல் வேற்றுமை உருபுகளையும், இலிருந்து வேற்றுமை உருபையும் ஏற்று வரும் கு வேற்றுமை உருபேற்ற பெயருடன் வரும்.

254. எங்கள் வீட்டிற்கு எதிரில் (எதிரே) காந்தி சிலை இருக்கிறது.

255. அணி, காந்தி சிலைக்கு எதிரிலிருந்து (எதிரேஇருந்து புறப்பட்டது.

பேச்சுத்தமிழில் குறிப்பாகத் தென்மாவட்டத்தில் எதிர்க்க என வரும்.

256. எங்கள் வீட்டிற்கு எதிர்க்க காந்தி சிலை இருக்கிறது.

எல்லாம்

எல்லாம் என்னும் பெயர்ச்சொல், முழுவதும் என்னும் பொருளில் வரும். ஆங்கிலத்தில் whole, totality என்பதற்கு நேரான பொருளில் வருகிறது. எல்லா+உம் எனப் பிரித்து, உம் முற்றும்மை எனலாம். முற்றும்மை இல்லாது இப்பெயர் வருவதில்லை. இது பெயராக எல்லா வேற்றுமை உருபுகளையும் ஏற்று வரும். அப்பொழுது வற்றுச் சாரியையோடு உம் இறுதியில் வரும். எல்லாவற்றையும், எல்லாவற்றாலும், எல்லாவற்றுக்கும் என வருதல் காண்க.

257. அவன் எல்லாவற்றையும் சாப்பிட்டுவிட்டான்.

இது சொல்லுருபாக வரும்பொழுது வேற்றுமை உருபேற்காது. கு வேற்றுமை உருபேற்ற பெயருடன் வரும். அது காலப்பெயராக இருக்கும்பொழுது, குறிப்பிட்ட காலத்தில் என்ற பொருளைத் தரும்.

258. ஐந்து மணிக்கு எல்லாம் கட்டாயம் வந்துவிடு.

259. செய்த வேலைக்கு எல்லாம் கூலி கொடுத்துவிட்டேன்.

பதில்/பதிலாக

பதில் என்ற பெயரை ஆங்கிலத்தில் answer, exchange, substitute என்று மொழிபெயர்க்கலாம். பெயராக எல்லா வேற்றுமை உருபுகளையும் ஏற்று வரும்.

260. நாங்கள் இந்தப் பதிலை ஏற்றுக்கொள்ள முடியாது.

இப்பெயர் ஆக என்ற வினையடை உருபு ஏற்றும், ஏற்காமலும் சொல்லுருபாக வரும்.

261. சினிமாவிற்குப் பதில் (பதிலாகக்) கடற்கரைக்குப் போவோம்.

வெளி/வெளியே/நேர (நேராக) வெளியே

வெளி என்னும் பெயர் exteriority, outside, open space என்ற பொருளில் வருகிறது. பெயராக வரும்பொழுது இல் வேற்றுமை உருபோ, கு வேற்றுமை உருபோ ஏற்று வருகிறது.

262. வெளியில் போ.

263. நேர வெளியில் போ.

264. வெளிக்குப் போகிறான்.

265. நேர/நேராக வெளிக்குப் போனான்.

சொல்லுருபாக வரும்பொழுது ஏ என்னும் இல் வேற்றுமை உருபேற்று, கு உருபேற்ற பெயருடன் வரும். சொல்லுருபு நேர் (நேராக) என்ற அடைபெற்றுக் கூட்டுச் சொல்லுருபாகவும் வரும்.

266. ஊருக்கு நேர (நேராக) வெளியே ஒரு பெரிய ஆலமரம்.

267. வீட்டுக்கு உள்ளே ராமன்; வெளியே கிருஷ்ணன்.

1.6 இன் உருபேற்ற பெயருடன் வருவன.

சுட்டுப்பெயராயின் அன் என்ற உருபு வரும்-அதன். தன்மை முன்னிலைப் பெயர்கள் வேற்றுமை உருபேற்கும் வடிவில் வரும்.

படி

ஒரு நிகழ்ச்சியின் நிகழ்முறையினைச் (manner) சுட்டி வரும்.

இது பெயராக வரும்பொழுது, ஆக என்ற வினையடை உருபை ஏற்று வரும். அந்தப் படியாகவே இராமனானவன் என்பது போன்ற தொடர்களைப் புராண பிரசங்கங்களில் கேட்கலாம்.

268. அவன் இந்த வேலையை ஒருபடியாகச் செய்து முடித்தான்.

சொல்லுருபாக வரும்பொழுது, இன் உருபேற்ற பெயருடன் வரும்.

269. அவன் சாதிக்கட்டுப்பாட்டின்படித் திருமணம் செய்து கொண்டான்.

270. என் விருப்பத்தின்படி எதுவும் நடக்காது.

271. அதன்படி எல்லாம் நடக்கும்.

மூலம்

மூலம் என்பதை through என்று மொழிபெயர்க்கலாம். ஒன்றன் வழியாக என்பது பொருள். பெயராக வரும்பொழுது எல்லா வேற்றுமை உருபுகளையும் ஏற்று வரும்.

சொல்லுருபாக வரும்பொழுது, வேற்றுமை உருபு எதுவும் ஏற்பதில்லை. இன் வேற்றுமை உருபேற்ற பெயரோடு வரும்.

272. தோட்டத்தின் மூலம் அவனுக்கு ஆண்டுக்கு ரூ. 2000 வருகிறது.

273. என் மூலம் அவனுக்கு வேலை கிடைத்தது.

1.7. கு வேற்றுமைப் பெயரோடும், இன் வேற்றுமைப் பெயரோடும் வருவன. மூவிடப் பெயர்கள் கு வேற்றுமையிலேயே வரும்.

அப்பால்/அப்பாலிருந்து

அப்பால் என்பதை ஆங்கிலத்தில் beyond என்று மொழிபெயர்க்கலாம். பக்கம் என்று பொருள் படும், பால் என்னும் உருபு சேய்மைச் சுட்டுப்பெற்று அப்பால் என வந்தது. இப்பொருளில் பால் தனியாக வருதல் இல்லை. இது பெயராக வருவது அருமை. சொல்லுருபாக வரும்பொழுது இல் வேற்றுமை உருபையும் இலிருந்து வேற்றுமை உருபையும் ஏற்று வரும். கு வேற்றுமை உருபேற்ற பெயருடனும், இன் உருபேற்ற பெயருடனும் வரும்.

274. இது கடலுக்கு அப்பாலிருந்து வந்தது.

275. குமரிக்கு (குமரியின்) அப்பால் கடல்தான் இருக்கிறது.

276. இந்த ஆற்றுக்கு (ஆற்றின்) அப்பால் நம் ஊர் இருக்கிறது.

277. அதற்கு அப்பால் ஒன்றும் இல்லை.

கீழே/கீழேயிருந்து/நேர (நேராகக்) கீழே

கீழ் - தாழ்ச்சி, அடி என்று பொருள் படும். ஆங்கிலத்தில் inferiority, that which in below என்று பொருள்படும். இது கு வேற்றுமை உருபேற்றுக் கிழக்கு எனத் திசையைக் குறித்து வரும். வேறு எங்கும் இது பெயராக வந்து வேற்றுமை உருபு எதுவும் ஏற்பதில்லை. ஆனால், ஆக என்ற வினையடை உருபை ஏற்று வரும்.

278. அவன் எல்லாவற்றையும் தலைகீழாக மாட்டினான்.

சொல்லுருபாக வரும்பொழுது, ஏ உருபு பெற்று கீழே எனவும், இலிருந்து வேற்றுமை உருபு ஏற்றும் வரும். இவை கு வேற்றுமைப் பெயரை அடுத்து வரும். அப்பெயரால் சுட்டப்படும் பொருளுக்குத் தாழ்ந்த நிலையைக் குறிக்கும். மேலே என்பதற்கிருப்பதைப் போலத் தொட்டிருத்தல், தொடாதிருத்தல் என்ற வேறுபாடு இதற்கில்லை.

நேர், நேராக என்று அடைபெற்றுக் கூட்டுச் சொல்லுருபாகவும் வரும்.

279. கல்லுக்குக் (கல்லின்) கீழே மண் இருக்கிறது.

280. மேசைக்குக் (மேசையின்) கீழே ஒரு பெட்டி இருக்கிறது

281. மேசைக்கு (மேசையின்) நேர (நேராகக்) கீழே பெட்டி இருக்கிறது.

282. மேசைக்குக் (மேசையின்) கீழே இருந்து எடுத்தான்.

283. கல்லுக்குக் (கல்லின்) கீழே இருந்து மண்ணைத் தோண்டி எடுத்தான்.

284. இந்தக் கல்லுக்கு நேர (நேராகக்) கீழே தண்ணீர் கிடைக்கும்.

குறுக்கே

குறுக்கு என்ற பெயர் transverseness, diametrical, across என்ற பொருளில் வரும். பெயராகக் குறுக்கு எலும்பு என்று வருதல் காண்க. ஆக என்ற வினையடை உருபேற்று இது எல்லா வேற்றுமை உருபு-களையும் ஏற்று வரும்.

285. குறுக்கை ஒடித்தான்.

287 குறுக்காக (குறுக்கில்) சைக்கிளை வைக்காதே.

இது, இல் வேற்றுமை உருபாகிய ஏகாரத்தைப் பெற்றுக் குறுக்-கே எனச் சொல்லுருபாக வந்து, கு வேற்றுமைப் பெயரோடும், இன் உருபேற்ற பெயரோடும், வரும்.

287 வீட்டின் (வீட்டுக்குக்) குறுக்கே குழாய் ஓடுகிறது.

288. மலையின் (மலைக்குக்) குறுக்கே விமானம் பறக்கிறது.

நடுவில் / நடுவிலிருந்து

நடு என்பது middle, centre என்ற பொருளில் வரும். நடு என்ற பெயர், பெயர் + பெயர் என்ற கூட்டுப்பெயரில் முதற்-பெயராக வரும். நடுராத்திரி, நடுப்பகல் என்ற பெயர்களைக் காண்க. பெயர் எல்லா வேற்றுமை உருபுகளையும் ஏற்று வரும்.

சொல்லுருபாக வரும்பொழுது, இல் வேற்றுமை உருபேற்றும் இலிருந்து உருபேற்றும், கு, இன் உருபுகளேற்ற பெயர்களின் பின் வரும்.

289. ஊருக்கு (ஊரின்) நடுவில் ஒரு கோயில் இருக்கிறது.

290. அவன் உனக்கும் எனக்கும் நடுவில் நின்றான்.

291. அணி ஊரின் நடுவிலிருந்து புறப்பட்டது.

பிறகு (பின்பு)

பிறகு, பின்பு என்ற பெயர்கள் afterwards என்ற பொருளைத் தரும். காலத்தால் பிற்பட்டதைக் காட்டும். சில வட்டாரப் பேச்சில் இது கு வேற்றுமை உருபு ஏற்று வருகிறது. பிறகுக்கு நீங்கள் என்ன சொன்னீர்கள்? என்பதைக் காண்க.

இவை சொல்லுருபாகக்,கு வேற்றுமை அல்லது இன் உரு-பேற்ற பெயரோடு வரும். அப்பெயர் குறிப்பிடும் நிகழ்ச்சிக்குக் காலத்தால் பிற்பட்டதைக் குறிக்கும்.

292. கூட்டத்திற்குப் (கூட்டத்தின்) பின்பு (பிறகு) அனை-வரும் ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்குப் போ-வோம்.

293. சாப்பாட்டிற்குப் (சாப்பாட்டின்) பிறகு (பின்பு) அவன் தூங்குவான்.

பின்/பின்னால்/பின்னுக்கு/பின்னாடி/நேர் (நேராகப்) பின்னால்

இவை ஆங்கிலத்தில் Posterity in space and time, that which is behind, after என்பது போன்ற பொருளுக்கு நேராக வரும்.

பெயராக வரும்பொழுது கு வேற்றுமை உருபும், ஆல் உருபும் ஏற்றுவரும். ஆல், இடப்பொருளில் வருகிறது.

294. போலீஸ் ஜனங்களைப் பின்னுக்கு / பின்னால் தள்ளி விட்டார்கள்.

இங்கு ஆல் உருபும் இடப்பொருளையே தருகிறது. அது, இல் வேற்றுமையின் உருபேயாகும். சங்கத் தமிழில் ஆல் இடப்-பொருளைத் தருவதை S. V. சண்முகம் காட்டியுள்ளார் (1971, 260-264). இப்பொழுது முன், பின் என்ற சொல்லுருபுகளிலேயே அதனைக் காணலாம்.

பின் என்றும், பின்னால் என ஆல் உருபேற்றும், பின்னுக்கு எனக் கு உருபேற்றும், பின்னாடி என ஆடி என்ற வினையடை உருபேற்றும் சொல்லுருபுகளாக வரும். இவை கு உருபேற்ற பெயருடனோ, இன் உருபேற்ற பெயர்களுடனோ வரும். அப்-பெயர்களை மையமாகக் கொண்டு, இடப்பின், காலப்பின் என்ற பொருளைத் தரும். காலப்பெயர் கு வேற்றுமையுடனேயே வரும்.

நேர், நேராக என்ற அடை பெற்றுக் கூட்டுச்சொல்லுருபாகவும் வரும்.

---

1. *Dravidian Nonus*, Annemali University.

295. ஐந்து மணிக்குப்பின் (பின்னால்) (பின்னுக்கு) (பின்னாடி) பாருங்கள்.

296. அம்மாவிற்கு (அம்மாவின்) பின் (பின்னால்) ஒரு தோட்டம் இருக்கிறது.

முன்/முன்னால்/முன்னுக்கு/முன்னாடி/நேர் (நேராக) முன்னால்

ஆங்கிலத்தில் in front of, before, anterior in space and time என்பதற்கு நேரான பொருளில் வருகிறது.

பின் என்பதன் கீழ் கூறியவை எல்லாம் இதற்கும் ஒக்கும் பெயராக

297. பள்ளிக்கூடத்தை முன்னுக்குக் கொண்டு வந்தான்.

298. கூட்டத்தை முன்னுக்கு/முன்னால் தள்ளினான்.

சொல்லுருபுகளாக

299. வாகனத்தைக் கோயிலுக்கு (கோயிலின்) முன் (முன்னால்) (முன்னுக்கு) கொண்டு வந்தார்கள்.

300. வாகனத்தைக் கோயிலுக்கு நேர் (நேராக) முன்னாடிக் கொண்டு வாருங்கள்.

பேச்சுத் தமிழில் வேற்றுமை உயிபேற்கும் பெயர் வடிவுடன் இது வரும்.

301. படத்து முன்னால் நின்று பாடு.

1.8 கு வேற்றுமைப் பெயர், இன் உருபேற்ற பெயர், வேற்றுமை உருபேற்கும் பெயர் இவற்றுடன் வருவன.

கிட்ட

இதுவும் ஆங்கிலத்தில் near என்ற பொருளைத் தருகிறது. பேச்சுத் தமிழிலேயே இது மிகுதியாக வருகிறது. இதன் பெயர் கிட்டம் என்றிருக்கலாம். அந்த ஊர் கிட்டத்தில் இல்லை, என்று பெயராக அம் ஈற்றுப்பெயர் போல அத்துச்சாரியை பெற்று வருதல் காண்க.

கிட்ட என்பது இல் வேற்றுமை உருபேற்றுச் சொல்லுருபாக, கு வேற்றுமைப் பெயர், இன் உருபேற்ற பெயர், வேற்றுமை உருபு ஏற்கும் பெயர் வடிவு இவற்றுடன் வரும்.

302. அவன் மரத்தின் (மரத்துக்குக்) (மரத்துக்) கிட்ட நிற்கிறான்.

303. எங்கள் வீட்டின் (வீட்டுக்குக்) (வீட்டுக்) கிட்டே ஒருத்தி கடை வைத்திருக்கிறாள்.

பக்கம்/ பக்கத்தில்/ பக்கத்திலிருந்து

ஆங்கிலத்தில் side, near என்ற பொருளைத் தரும் இடத்தாலும் காலத்தாலும் அருகில் இருப்பதைக் குறிக்கும். பெயராக வரும்பொழுது எல்லா வேற்றுமை உருபுகளையும் ஏற்று வரும்.

304. இந்தப் பக்கத்தைப் பார்.

305. இத்தப் பக்கத்தில் ஒன்றும் இல்லை.

306. பக்கத்திற்குப் பக்கம் ஒரே கூட்டம்.

இது பக்கம் எனவும், பக்கத்தில் என இல் வேற்றுமை உரு-பேற்றும், பக்கத்திலிருந்து என்று இலிருந்து வேற்றுமை உருபுடனும் சொல்லுருபாக வரும். கு வேற்றுமைப் பெயர், இன் உருபேற்ற பெயர், வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவம் இவற்றுடன் வரும்.

307. எங்கள் வீட்டின் (வீட்டிற்குப்) (வீட்டுப்) பக்கம் (பக்கத்தில்) ஒரு டீ கடை இருக்கிறது.

308. கிணற்றுப் பக்கத்திலிருந்து அந்தப் பாம்பு புறப்பட்டது

மேல்/ மேலே/ மேலேஇருந்து/ நேர் (நேராக) மேலே

இது ஆங்கிலத்தில் superiority, above, on, top என்பன போன்ற பொருளைத் தருகிறது.

இது பெயராக வரும்பொழுது கு வேற்றுமை உருபேற்றும் ஏற்காமலும் வரும்.

உருபேற்று வருதல் பெரும்பாலும் பேச்சுத்தமிழில் வழங்கும். வேறு எந்த வேற்றுமை உருபையும் ஏற்காது.

309. மேலுக்கு (மேலே) என்ன சொன்னான்?

310. அவள் அதை மேலுக்குச் சொன்னாள்.

சொல்லுருபாக வரும்பொழுது ஏ உருபேற்றும் ஏற்காமலும் வரும். வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவு, கு வேற்றுமைப் பெயர், இன் உருபேற்ற பெயர் இவற்றை அடுத்து வரும்.

311. மரத்து (மரத்துக்கு) (மரத்தின்) மேல் (மேலே) ஒரு கிளி உட்கார்ந்திருக்கிறது.

312 என் மேல் பழியைச் சுமத்தாதே.

மரத்தைத் தொடாமல், கிளி மரத்தின் மேல் பறக்குமாயின் அப்பெயர் கு/இன் உருபேற்று வரும். அங்கு, வேற்றுமை உருபேற்கும் பெயர் வடிவு வராது.

313. மரத்துக்கு(மரத்தின்) மேல்/மேலே ஒரு கிளி பறக்கிறது.

314 மேசைக்கு மேலே காலண்டர் தொங்குகிறது.

காலப்பெயரோடு வரும்பொழுது, அந்தக் காலத்திற்குப்பின் என்ற பொருளைத் தரும். அங்கு இன் வராது. கு உருபே வரும்.

315. ஐந்து மணிக்கு மேல் வாருங்கள்.

2.0. வினைச் சொல்லுருபுகள்

பெரும்பாலும் வினை எச்சங்கள் வினைச் சொல்லுருபுகளாக வருகின்றன. வினை எச்சமாக நின்று தரும் பொருளும் சொல்லுருபாக நின்று தரும் பொருளும் மூலத்தைப்பார்க்க பெரும்பாலும் வேறுபட்டே இருக்கின்றன. வினை எச்சமாக வரும் பொழுது, கொண்டு முடியும் வினைக்கு அண்மையுறுப்பாக வரும். சொல்லுருபாக வரும்பொழுது முன்புள்ள பெயருக்கு அண்மையுறுப்பாக வரும். அச்சொல்லுருபுத் தொடர், பின்பு வினைகொண்டு முடியும்.

2.1. திரிபில் பெயருடன் வருவது

கூட

இது, together, join என்று பொருள் படும். கூடு என்னும் வினையின் செய்ய என்ற வாய்பாட்டு வினை எச்சம் கூடினான் என்பது போல வினைமுற்றாக வரும். கூடவேண்டும் என்று எச்சமாக வருதலைக் காண்க.

சொல்லுருபாக, உயர்திணைப்பெயர்களுடனேயே வரும். அப்பொழுது இது with, alongwith என்று பொருள் தரும். திரிபில்லாத பெயருடன் வரும். மூவகைப் பெயர்கள் வேற்றுமை உருபேற்கும் வடிவில் வரும்.

316. அம்மாகூடப் பேசாதே.

317. ஆறுமுகம்கூடப் போகிறான்.

318. என்கூட வராதே.

2.2. ஐ வேற்றுமைப் பெயருடன் வருவன.

காட்டிலும்

இது, show என்று பொருள் தரும் காட்டு என்னும் வினையின் நிபந்தனை எச்சம். அது உம் உருபேற்றுக் காட்டிலும் என வந்தது. காட்டில் என்ற நிபந்தனை எச்சம், இக்காலத் தமிழில் காட்டினால், காண்பித்தால் என வரும்.

319. நீ அதைக் காட்டில்/காண்பித்தால்/காட்டினால் அதன் விலையை நான் மதிப்பிட முடியும்.

காட்டிலும் என்பது சொல்லுருபாக வரும்பொழுது, ஒன்றை விட மற்றொன்று என்ற பொருளைத் தருகிறது. இது ஐ வேற்றுமை உருபேற்ற பெயரை அடுத்து வரும்.

320. என்னைக்காட்டிலும் என் தம்பி உயரம்.

கொண்டு

இது, hold, contain, have என்று பொருள் தரும் கொள் என்ற வினையின் செய்தென் எச்சம். எடுத்துக் கொண்டு போனான்; காப்பி கொண்டு போனான், என்ற இடங்களில் வினையாகப் பயன்படுதல் காண்க. இது கொண்டுவா, கொண்டுபோ என்று கூட்டு வினையாகப் பெரும்பாலும் பயன்படுகிறது.

சொல்லுருபாகப் பயன்படும்பொழுது by, on the basis of என்ற பொருளில் வரும். ஐ வேற்றுமைப் பெயருடன் வரும்.

321. அவனைக்கொண்டு எதற்கும் பயன் இல்லை.

322. ஆடையைக்கொண்டு ஆளை மதிப்பிடாதே.

தவிர

இது except, give up என்று பொருள் படும் தவிர என்ற வினையின் செயவென் எச்சம். எனினும், சொல்லுருபாக அடிக்கடி வருகிறது. சொல்லுருபில் except என்ற பொருளில் வருகிறது. ஆனால் செயவென் எச்சமாக மிக அருமையாகவே வருகிறது. ஐ வேற்றுமைப் பெயரை அடுத்து வரும்.

323 அப்பாவைத்தவிர வேறு யாரும் வரவில்லை

பற்றி

இது grab, catch hold of, கொள், பிடி என்று பொருள்படும் பற்று என்ற வினையின் செய்தென் எச்சம்.

324. அவன் என்னிடமிருந்து நிறைய பற்றிக் கொண்டான்.

சொல்லுருபாக வரும்பொழுது about என்ற பொருளில் வருகிறது. ஐ வேற்றுமை உருபேற்ற பெயருடன் வருகிறது.

325. அவர் மொழியியலைப் பற்றிப் பொதுவாகப் பேசினார்.

இது, பற்றின என்று பெயரெச்சத் தொடராகவும் இவ்வாறு வரும். பொருளில் வேறுபாடு எதுவும் இல்லை.

326. அவனைப்பற்றின செய்திகளைக் கேட்டேன்.

விட

இது, leave என்று பொருள் படும் விடு என்ற வினையின் செயவென் எச்சம்.

சொல்லுருபாக வரும்பொழுது ஒன்றைவிட மற்றொன்று என்ற பொருளில் வரும். ஆங்கிலத்தில் bigger, better எனபதில் வருகிற — er என்பதற்கிணையான பொருளைத் தரும். ஐ வேற்றுமைப் பெயரோடு வருகிறது.

327. என்னைவிட அவன் பெரியவன்.

2.3 ஐ வேற்றுமைப் பெயருடனும் திரிபில் பெயருடனும் வருவன

போல்/போல(போன்று)

இது, to be like என்று பொருள்படும் போல் என்ற வினை-யின் ஏவல் வினை வடிவம். ஆனால் ஏவலாக இப்பொழுது பயன் படுதல் இல்லை. போல்/போல என்பன சொல்லுருபாகவே பயன்-படுகின்றன. ஐ வேற்றுமை உருபேற்ற பெயருடனும், எழுவாய்ப் பெயருடனும் வரும். அப் பொருளோடு மற்றொன்றை ஒப்பிட்டுக் கூறும் பொருளில் வருகிறது.

328. அவன் மாடுபோல் உழைக்கிறான்.

329. ஆறுமுகத்தைப்போல் எவரும் உழைக்க முடியாது.

2.4 ஐ வேற்றுமைப் பெயருடனும், இல் வேற்றுமைப் பெயருடனும் வருவது

வைத்து

இது, put, place என்று பொருள் தரும் வை என்னும் வினையின் செய்தென் எச்சம். கீழே வைத்துப் பார் என வினை எச்சமாக வருதலைக் காண்க.

சொல்லுருபாக வரும்பொழுது, in, at, with என்ற பொரு-ளில் வரும். இது ஐ வேற்றுமைப் பெயருடனும், இல் வேற்றுமைப் பெயருடனும் வரும். தமிழகத்தில் தெற்குப் பகுதியிலேயே இது மிகுதியாக வழங்குகிறது.

330. குச்சியைவைத்து என்ன செய்யப் போகிறீர்கள்?

331. குச்சியைவைத்து என்னை அடித்தான்.

332. கோயிலில்வைத்துப் பார்த்தேன்.

முதல் இரண்டு வாக்கியங்களிலும் (330,331) உள்ள பெயர்-கள் இல் வேற்றுமை உருபுடன் வைத்து இல்லாமலும் வரலாம். பொருளால் வேற்றுமை இல்லை.

333. குச்சியால் என்ன செய்யப் போகிறீர்கள்?

334 குச்சியால் என்னை அடித்தான்.

2.5 கு வேற்றுமை உருபேற்ற பெயருடன் வருவன.

அடுத்தாற்போல்/நேர அடுத்தாற்போல்/மிகவும் அடுத்தாற் போல்

இது, next, adjacent என்ற பொருளில் வரும். அடு என்ற வினையின் அடுத்தால் என்ற நிபந்தனை எச்சம், போல் என்ற உவமை உருபு பெற்றது. நேர அடுத்தாற்போல், மிகவும் அடுத்தாற்போல் எனக் கூட்டுச் சொல்லுருபாகவும் வரும்.

ஒன்றை அடுத்த மற்றொன்று என்ற பொருளில் வரும். கு வேற்றுமைப் பெயரோடு வரும்,

335. எங்கள் வீட்டிற்கு அடுத்தாற்போல் ஒரு கோயில் இருக்கிறது.

336. எங்கள் வீட்டிற்கு நேர/மிகவும் அடுத்தாற்போல்தான் அக்கோயில் இருக்கிறது.

337. எனக்கு அடுத்தாற்போல் முருகன் வருவான்.

**ஆக**

இது, to happen, நிகழ் என்று பொருள் தரும் ஆகு என்பதன் செயவென் எச்சம். ஆனால் அப்பொருளில் மிக அருமையாகவே வருகிறது. ஆக வேண்டும். ஆக, தனிச் சொல்லாகவும் வரும்.

338. ஆக. உன்னால் ஒன்றும் செய்ய முடியாது.

ஆக என்பது சொல்லுருபாக வரும்பொழுது ஒருவருக்காக, for the sake of என்ற பொருளில் வரும். கு வேற்றுமைப் பெயரோடு வரும்.

339. அவனுக்காக இவ்வளவு நேரம் காத்திருந்தேன்.

**எதிர்த்தாற்போல்/நேர எதிர்த்தாற்போல்**

இது, oppose என்னும் பொருள் தரும் எதிர் என்ற வினையின் நிபந்தனை எச்சம். போல் என்ற உருபேற்று, எதிர்த்தாற்போல் என்று சொல்லுருபாக வருகிறது.

இச்சொல்லுருபு நேர என்ற அடைபெற்றக் கூட்டுச் சொல்லுருபாகவும் வரலாம். கு வேற்றுமை உருபேற்ற பெயருடன் வரும்.

340. கோயிலுக்கு எதிர்த்தாற்போல் ஒரு குளம் இருக்கிறது

341. கோயிலுக்கு நேர எதிர்த்தாற் போல் ஒரு குளம் இருக்கிறது.

